

மியூஸிக் மில்லியனர்!
- Exclusive

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 01.02.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஜாலி எலெக்ஷன்!
- காலேஜ் ரவுசு





# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் சின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. சின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே சின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.



01.02.2009

கல்கி




## ■ நியூஸ் பாய் ■

'அடுத்த சிம்ரன்' என்று ஆரவாரமாக வரவேற்கப்பட்டவர் நடிகை இலியானா. சம்பள விஷயத்தில் ஒரு கோடி ரூபாய் என்று குண்டைப் போட்டதும், கொண்டாடிய தயாரிப்பாளர்கள் எகிறிக் குதித்து ஓட ஆரம்பித்திருக்கிறார்கள்.

*(ஆந்திரப் புயலா... கொக்கா?)*

சிலம்பு சுற்றியும் சிக்காத வெற்றியைக் கண்டுபிடித்தே ஆகவேண்டும் என்பதில் தீவிரமாக இருக்கிறார் சிம்பு. அதற்காக பெரிய டைரக்டர்களை வளைத்து வளைத்து பார்ட்டி நடக்கிறதாம்.

*(பார்ட்டி நடத்தி என்ன புண்ணியம், 'பார்ட்டி' அடங்கணுமே!)*

ஸ்ட்ரெயிட் படங்கள் ஊத்திக் கொண்டதால், ரீமேக் படங்களை நம்ப ஆரம்பித்திருக்கிறார் தனுஷ். அந்த வரிசையில் அல்லு அர்ஜுனா நடித்து தெலுங்கில் வெற்றி பெற்ற 'ஆர்யா' படத்தை 'குட்டி' என்ற பெயரில் தமிழ்ப்படுத்துகிறார்கள்.

*(குட்டியாவது சுட்டியா இருக்குமா?)*

குஷ்பு என்ன செய்தாலும் அது நியூஸ்தான். 'வில்லு'வில் பட்டையைக் கிளப்பிய டான்ஸ் பற்றிக் கேட்டால், அது நட்புக்காக ஒப்புக்கொண்டதாம்.

*(அடி சக்கை!)*

தற்காலிகமாக, நடிப்பதை ஒத்தி வைத்துவிட்டார் பிரபுதேவா. அதனால், அவரை ஹீரோவாக வைத்துக் கதை பண்ணியிருந்த இயக்குநர்கள் கலங்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

*(ஆராரோ, ஆரிராரோ!)*

இரட்டை வேடப்படங்களில் தனக்கு பிரேக் கிடைக்கவில்லை என்பதால், 'ஆரவாரம்' படத்தை மறுத்துவிட்டார் விஜய். அதனால், விஜய்க்குப் பதிலாக லாரன்ஸ் இரட்டை வேடத்தில் நடிக்கப் போகிறாராம்.

*(ஆரவாரமா இருக்குமா?)*

'வெண்ணிலா கபடிக் குழு' படம் நன்றாக வந்திருக்கிறதாம். ஆனால், அதை சன் பிக்சர்ஸுக்குக் கொடுக்காமல் சொந்தமாகவே ரிலீஸ் செய்யப் போவதாகச் சொல்கிறார்கள்.

*(அப்படியா?! அய்யோ அய்யோ)*

பழைய படங்களை ரீமேக் செய்வது புதிய டிரெண்ட். அந்த வகையில் விஜய் நடிக்கும் 'வேட்டைக்காரன்' படத்தின் தலைப்பு மட்டுமல்ல; கதையும், எம்.ஜி.ஆர். நடித்த வேட்டைக்காரன் படத்தின் தழுவல் தானாம்!

*(முழுசா சுட்டாதானே திருப்தி!?)*

'ஒரு கோடி ரூபாய் சம்பளம்' என்கிற உச்சத்தைத் தொட்ட நயன்தாராவுக்கு, இப்போது இறங்குமுகம். சமீபத்தில் அவர் நடித்து வெளியான படங்கள் கல்லா கட்டாததால், சம்பளத்தைக் குறைக்கலாமா என்ற யோசனையில் இருக்கிறார் அம்மணி.

*(உடம்பைக் குறைச்சது போலவா?)*

# சினி சிப்ஸ்



# கல்கி


பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**தமிழக அரசியல் சூழல் குறித்து அரசியல் விமர்சகர் பழ.கருப்பையாவின் பளிச் சுளீர் கருத்துக்கள் சில...**

### நாடகம் இங்கே நடக்குது!

ஈழப் பிரச்னையில் புலிகள் ஆதரவு - எதிர்ப்பு என்ற இரு நிலைகள் தமிழக கட்சிகளிடையே இருந்தாலும், தமிழர்கள் காப்பாற்றப்பட வேண்டும் என்ற நிலையில் கருத்து வேறுபாடு இல்லை. குறிப்பாக 'போர் நிறுத்தம்' என்பது ஒட்டுமொத்தக் கட்சிகளும் வைக்கும் கோரிக்கை. ஆனால், மத்திய அரசுக்கு கருணாநிதி பல முறை பணிந்து, நெளிந்து, வளைந்து வேண்டுகோள் வைத்தும் ஒன்றும் நடக்கவில்லை. கருணாநிதி வீட்டுக்கு முன்பாகவே பிரணாப் முகர்ஜி, 'போர் நிறுத்தத்



# காங்கிரஸின் காலை வாருவார் கருணாநிதி!

**- பழ.கருப்பையா பகீர்**

# "பொதுச் சொத்துக்குச் சேதம் விளைவித்ததைத் தவிர திருமாவின் உண்ணாவிரதம் சாதித்தது என்ன?"



துக்கு இலங்கையை வற்புறுத்த முடியாது?' என்று சொல்லிவிட்டுப் போகிறார். 'மத்திய அரசை நிர்பந்திக்க மாட்டோம். நெருக்கடி தர மாட்டோம்' என்று கருணாநிதி சொல்கிறார். பாராளுமன்ற உறுப்பினர்கள் ராஜினாமா செய்வார்கள் என்று ஒரு நாடகம் நடத்தினார். காங்கிரஸ்காரர்களோ, வெளியுறவுக் கொள்கையைப் பொறுத்த மட்டில், ஒரு கட்சி ஆட்சியைப் போல் நடந்துகொண்டு முடிவு எடுக்கிறார்கள். கருணாநிதி, துணிந்து முடிவு எடுப்பாரேயானால் ஒரு இரவில் மாற்றம் ஏற்படும். ஆனால், இங்கே பா.ம.க.வை, கம்யூனிஸ்ட்களை நம்ப முடியாத நிலையில் ஆட்சிக்கு காங்கிரஸ்தான் பாதுகாப்பு. எனவே, ஈழ விவகாரத்தில் நாடகத்தைப் போட்டு, காங்கிரஸுக்குக் காவல்காரராக நாட்களைக் கடத்திக்கொண்டிருக்கிறார் கருணாநிதி.

**திருமா - ராமதாஸ் :**

ஈழத் தமிழர்களின் உயிரைக் காப்பாற்ற -உண்ணா நோன்பு துவங்கிய திருமாவளவன், 'என் உயிரைக் காப்பாற்றுங்கள்' என்று போஸ்டர் அடிக்க வேண்டிய நிலைக்கு ஆளாகிவிட்டார். பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் ஏற்பட்டதைத் தவிர, இவரது உண்ணாவிரதம் சாதித்தது என்ன? காங்கிரஸை திருமா ஒரு பிடிபிடிக்க, கருணாநிதிக்கு ரோஷம் வந்துவிட்டது. காங்கிரஸை எதிர்ப்பது என்பது, தம்மை எதிர்ப்பது என்ற நிலையை அவர் எடுத்திருக்கிறார். இவரது அதிகபட்ச விசுவாசத்தை, காங்கிரஸ் புரிந்துகொள்ள வேண்டும். பாராளுமன்றத் தேர்தல் முடிந்த பிறகு, பா.ஜ.க.வுக்கு ஆட்சி அமைக்க இடங்கள் குறைந்தால் முதலில் கைநீட்டுவது கருணாநிதியாகத்தான் இருக்கும். காரணம், இன்னும் கனிமொழியை மத்திய அமைச்சராக்கி அழகுபார்க்கவில்லையே! சுயலாபத்துக்காக காங்கிரஸின் காலை வாரத் தயங்க மாட்டார். கடந்த காலத்தில் பா.ஜ.க.வின் காலை வாரியவர்தானே கருணாநிதி!

ராமதாஸ் உண்மையிலே ஈழப் பிரச்னையில் மத்திய அரசை நிர்பந்திக்க

# "ஈழப் பிரச்னையில் மத்திய அரசை நிர்பந்திக்க நினைத்தால் ராமதாஸ், தன் அமைச்சர்களை ராஜினாமா செய்ய சொல்லட்டும்!"



நினைத்தால், தங்கள் அமைச்சர்களையும் பாராளுமன்ற உறுப்பினர்களையும் ராஜி னாமா செய்ய வைத்தாலே மத்திய அரசின் போக்கு மாறிவிடும். ஆனால், எப்படிச் செய்வார்? பதவிகளைக் கடைசிவரை முழுமையாக அனுபவிக்க வேண்டுமே!

**விஜயகாந்த் வேஸ்ட்**

'எதிர்ப்பு வோட்டுக்களைப் பிரித்து, தி.மு.க.வின் வெற்றிக்கே விஜயகாந்த் வழி வகுக்கிறார்' என்று சோ சொல்வது ஓரளவு சரி. ஆனால், திருமங்கலம் தொகுதி முடிவு கள் அவர் பலவீனப்பட்டு வருவதை பளிச் சென்று காட்டிவிட்டன. இந்த நிலையில் அவரோடு யாரும் கூட்டணி வைக்க விரும்ப மாட்டார்கள். பா.ஜ.க. வைக்கலாம்.



**"பாராளுமன்றத் தேர்தலுக்குப் பிறகு விஜயகாந்த் காணாமல் போய்விடுவார்!"**

இதனால் விஜயகாந்துக்குத் தேர்தல் செலவு குறையுமே தவிர, வேறு எந்த ஆதாயமும் இருக்காது. விஜயகாந்த் எந்தவிதக் கொள்கைத் தெளிவுமில்லாமல் கட்சி நடத்துகிறார். அவருக்கு பாராளுமன்றத் தேர்தலில் பேசுவதற்கு என்ன பிரச்னைகள் இருக்கின்றன? திருமங்கலத்துக்குப் பிறகு சரத்குமார் காணாமல் போனதுபோல, பாராளுமன்றத் தேர்தலுக்குப் பின் விஜய காந்தும் காணாமல் போய் விடுவார்.

**கூட்டணி மாற்றம்**

ஈழப் பிரச்னையில் சில கட்சிகளின் மாறுபட்ட கருத்துக்கள் காரணமாக, பாராளுமன்றத் தேர்தலில் கூட்டணிகளில் மாற்றம் வரக்கூடும் என்று சிலர் கருத்துச் சொல்கிறார்கள். ஆனால், இப்போது அ.தி.மு.க., கம்யூனிஸ்ட், ம.தி.மு.க. கூட்டணியில் மாற்றம் வர வாய்ப்பில்லை. அதைப்போல தி.மு.க.வும் காங்கிரஸை விட்டு வராது. பா.ம.க. தேர்தல் அறிவிப்பு வரை அமைச்சர் பதவியை அனுபவித்து விட்டு, எந்த அணியில் அதிக இடம் கிடைக்கிறதோ அங்கே போய் இணைந்து விடும். சமயச் சார்பின்மையை மட்டுமே அடிப்படையாக வைத்தே அணிகள் அமை யும் வாய்ப்பு உண்டு. காங்கிரஸின் பொருளாதாரக் கொள்கைகள், அணுசக்தி ஒப்பந்தம் காரணமாகக் கடுப்பில் இருக்கும் காம்ரேடுகள், தொடர்ந்து அ.தி.மு.க.வுடன் தான் இருக்க விரும்புவார்கள். ஈழப் பிரச்னை அ.தி.மு.க. கூட்டணியில் எந்த மாற்றத்தையும் கொண்டு வராது. தீவிர புலி ஆதரவாளரான வைகோ, அ.தி.மு.க. அணியில் பலமுறை இருந்தவர்தானே? அதேசமயம் புலிகள் விவகாரத்தில் யார் எல்லை கடந்தாலும், ஜெயலலிதா தயவு தாட்சண்யமின்றி 'உள்ளே' தூக்கிப் போடு வார் என்பதே கடந்த கால உண்மை.

**மத்திய அரசு காமதேனு**

'மத்திய அரசில் பங்கு வகித்தால் ஆயிரக்கணக்கான கோடிகளைச் சுருட்ட முடியும்' என்று வெளிச்சம் போட்டுக் காட்டியது ஸ்பெக்ட்ரம் ஊழல். எனவே, பாராளுமன்றத்தில் அதிக இடங்கள் பெறு வதற்குக் கட்சிகளில் கடுமையான போட்டி கள் இருக்கும். ஸ்பெக்ட்ரம் ஊழல் பணம் அரசு கஜானாவுக்குச் சென்றிருந்தால் டீசல் விலையை இருபது ரூபாயாகக் குறைத் திருக்கலாம்.

**- ப்ரியன்**

# கோத்தி கேர்ள்ஸுக்குக் கொண்டாட்டம்!



## 'உங்க காலேஜ்ல மிஸ் பிரபலம் யாரு? அவங்களுக்கு என்ன பேரு? தில்லு இருந்தா என்ன காரணம் கூறு'

– செம கலக்கலா ஆரம்பமானது கல்கி நடத்தின ஜாலி எலெக்ஷன். எங்கே? செங்குன்றம் ஆர்.பி.கோத்தி மகளிர் கல்லூரியில தான். நாம் காலேஜ் காம்பஸுக்குள்ள காலடி எடுத்து வச்ச நேரம், கல்ச்சுரல் புரோகிராம் களைகட்டியிருந்தது. காலேஜ்னாலே ரவுசு ரண்டக்க ரண்டக்கன்னு ஆட்டம் போடுமேன்னு கலவரத்தோடதான் என்ட்ரி ஆனோம்!

''**எ**ங்க காலேஜ்ல ஏகப்பட்ட மிஸ்.பிரபலங்களும், ஏன் மிஸஸ். பிரபலங்களும் கூட இருக்காங்களே, இதுல எப்படி ஒருத்தரை மிஸ்.பிரபலம்ன்னு கண்டுபிடிக்கப் போறீங்க. உங்களுக்கு கொஞ்சம் கஷ்டமான வேலைதான். ஆனா இது எங்களுக்கு ரொம்பவே இஷ்டமான வேலை. ஏன்னா ஜாலியா, ஜாலி எலெக்ஷனை சாக்கா வெச்சுக்கிட்டு எங்க ஜோலிய எல்லாம் விட்டுட்டு வரலாம். அட அதாங்க க்ளாஸை கட் அடிச்சுடலாமே. தினம் தினம் இல்லாட்டியும் அட்லீஸ்ட் மாசம் ஒரு நாளாவது இப்படி ஜாலி எலெக்ஷன் நடத்தறீங்களா?'' என தேர்தல் வாக்குச் சீட்டைப் பார்த்தபடியே ஒரு கோரிக்கையை தேன்மொழி முன் வைத்தார்.




''இந்த மாதிரி வாக்குறுதி எல்லாம் நாங்க தரமாட்டோம். யாரு மிஸ்.பிரபலமா ஜெயிச்சு வர்றாங்களோ அவங்ககிட்ட இதைப் பத்திக் கேட்டுக்குங்க''.என்றபடி நாம் நகர, ''இஸ் மே க்யா ஹை?'' என பீஹாரிலிருந்து சென்னைக்குப் படிக்க வந்திருக்கும் ஆர்த்தி அதிசயித்துக் கேட்க, அங்கே திடீர் தமிழ் மொழிபெயர்ப்பாளர்களாகப் பல மாணவிகள் களத்தில் குதித்துக் குதூகலப்பட்டனர்.

''ஒவ்வொருத்தருக்குள்ளேயும் ஒவ்வொரு திறமை ஒளிஞ்சுக்கிட்டு இருக்கு. தோ பாருங்க நம்ம குணசுந்தரியை. சூப்பரா மிமிக்ரி பண்ணுவா. நம்ம நாகலட்சுமி ஆட ஆரம்பிச்சா அத இன்னிக்கு முழுசுமா பார்த்துக்கிட்டே இருக்கலாம். எங்க கிளாஸ்ல ஒரு பொண்ணு சிரிச்சுக்கிட்டே இருப்பா. இன்னொருத்தி சிரிக்கவே மாட்டா. அவ, கலகலா சுந்தரின்னா இவ நர நர சுந்தரி. இப்படி நவரச நாயகிகள்





● கல்லூரி எண்ட்ரன்ஸ்..

இங்க பலர் இருக்கோம்...'' என்று முன்னுரை கொடுத்தார் சுதா.

குணசுந்தரியின், 'தலைநகரம்' திரைப் படத்தில் வரும் வடிவேலு, சுந்தர். சி காமெடி ஸீனின் மிமிக்ரியைப் பார்த்து காலேஜ் அரங்கமே ஒரு பத்து நிமிஷத்துக்கு காமெடி அரங்கமாக உருமாறியது. ''நம்ம நாகு சூப்பரா பாடுவாங்க ஆடுவாங்கன்னெல்லாம் சொன்னீங்க'' என நாம் நாகலட்சுமியைப் பார்த்துக் கேட்க, ''ஓ அதுக்கென்ன பாடிட்டா போச்சு'' என்றபடி, ''எல்லோரும் ரெண்டு கைகளையும் க்ளாப் அடிக்க ரெடியா வெச்சுக்குங்க'' என்றபடியே நாகலட்சுமி, ''ஜானி ஜானி யெஸ் பாப்பா, ஈட்டிங் சுகர் நோ பாப்பா...'' என ஆரம்பிக்க, ''யப்பா யப்பா விடுங்கப்பா... தேர்தலை நல்லபடியா முடிச்சிட்டு நாங்க கிளம்பிடறோம்பா...'' என்றபடி நாம் அங்கிருந்து வாக்குப் பெட்டிகளுடன் கிளம்ப, 'கல்கி'யின் ஜாலி எலெக்‌ஷனும் ஆர்.பி. கோதி ஜெயின் கல்லூரியின் கலாசார கலை விழாவும் சேர்ந்தே கலகலவென அரங்கேறின.

**த**ன்னம்பிக்கை மிக்கவர்கள் தாங்கள் எனச் சொல்வது போல் சுமார் 30 பெண்கள் தங்கள் பெயரையே மிஸ். பிரபலமாக முன்மொழிந்திருந்தனர். நீயா நானா? அவளா? இவளா? யார் ஜெயிச்சிருப்பாங்க என்ற கேள்விக்கணைகள் கல்லூரி வளாகத்தில் வளைய வந்து கொண்டிருக்க, பி.காம். இரண்டாம் வகுப்பு மாணவி ஏ.கௌசல்யா மிஸ்.பிரபலமாக ஆவதற்கான அதிக அளவு வாக்குகளை அள்ளிக் குவித்திருந்தார். ''அவ எல்லோரையும் சந்தோஷப்படுத்துவா. அவ இல்லாதபோது வெறுமையாயிருக்கும்.'' சுத்தியிருக்கிறவர்களை இம்ப்ரெஸ் பண்றவதான் ஹீரோயினா இருக்க முடியும் என்ற லாஜிக் தந்த மேஜிக் ரிசல்ட் தான் கௌசல்யாவின் தேர்வு. மாணவிக்கு அடுத்தபடியாக ஏன் சரிக்கு சமமாக அதிக அளவு வாக்குகளை அள்ளி இருந்தார் பேராசிரியை காயத்ரி. மாணவிகளின் மனம் கவர்ந்த மற்றொரு மேம் குமுதினி. எலெக்‌ஷன் ரவுசுல நடுநடுவே மேடைக்குச் சென்று சினிமா பாடல்களைப் பாடி அசத்திய பேராசிரியை குமுதினியின் பாடலைப் போலவே அவரது கவிதை வரிகளும் இனிமையாகவே இருந்தன. (ஸார் இந்தக்

கவிதை கல்கில வருமா?)

மிஸ்.பிரபலத்தை மேடை ஏறி அறிவிக்க இருந்த சமயத்தில் வானவில்லே தரைக்கு இறங்கி வந்ததைப் போல வண்ண வண்ணச் சேலைகளுடன் ஃபேஷன் ஷோ-வுக்காகத் தயாரானபடி சில பெண்கள் அங்கேயும் இங்கேயுமாக கேட் வாக் பழகிக்கொண்டிருந்தனர். ''அது என் னங்க அது பூனை நடைன்னு ஒரு பேரு?'' என ஜாலியாக ஜானகியிடம் நாம் கேள் வியை முன் வைக்க, ''ஹா அதுவா.. அது வேற ஒண்ணும் இல்லீங்க. யானை மாதிரி ஃபேஷன் ஷோ-ல நடந்தா அசிங்கமா யிடும் இல்லயா. அதனாலதான் அதுக்கு கேட் வாக்-ன்னு பேரும் சூட்டி பூனை மாதிரியே அப்படியே மெல்லவும் நடை போடறோம்'' என சூப்பராகப் பெயர் விளக்கம் கொடுத்தார். ''எனக்கு ஒரு உண்மை தெரிஞ்சாகணும். அது ஏன் எல் லோரும் என்னவோ கோயிலுக்கு கிளம்பற கெட்டப்ல ஃபேஷன் ஷோ போட்டிக்குத் தயாராகி இருக்கீங்க?'' என நாம் கேட்க... ''எங்க காலேஜ்ல சேலைக்கு மட் டும்தான் ஓ.கே. சொல்லுவாங்க. மத்த ட்ரெஸ் எல்லாம் நாட் ஓ.கே.'' அழகாக போஸ் கொடுத்தார் பவானி. ''சூப்பரா சேலை கட்டி இருக்கீங்க பவானி'' என்றதும், ''அட நீங்க வேற. ஆள வெச்சு அடிக்கிற மாதிரி சேலை கூட ஆள் வெச்சுதான் கட்ட வேண்டிய காலமாகிப் போச்சு'' என்றார். ''சர்தான் சர்தான்'' என்ற படி தேர்தல் முடிவுகளோடு ஒரு வழியாக நாம் மேடை நோக்கி முன்னேற, ''இதோ உங்கள் கல்லூரியின் மிஸ்.பிரபலமான ஏ.கௌசல்யா'' என நாம் அறிவிக்க கௌசல்யாவின் விழிகளில் ஈர மழை... கல்லூரியின் முதல்வர் திருமதி. கோமதி, கௌசல்யாவுக்கு கல்கியின் சான்றிழை வழங்கி, கிரீடமும் சூட்டி, அமர்க்களப் படுத்தினார். வாக்கெடுப்பில கலந்துக் கிட்டவங்க பேரைக் குலுக்கிப் போட்டு பத்து பேரைப் பொறுக்கி எடுத்தோம். அவங்களுக்கு 4 வாரம் கல்கி இலவசம்.

## குறை தீர்க்க வந்த கோத்தி!

முதல்வர் திருமதி கோமதி, அக்கல் லூரியின் சிறப்பம்சங்கள் குறித்துச் சொன்னார். ''திருவள்ளூர் மாவட்டத்தில் பெண்களுக் கென்று தனி கல்லூரி இல்லாத குறை யைப் போக்கவே செங்குன்றம்






* கல்லூரி முதல்வர் கோமதி விருது வழங்குகிறார்




பகுதியில் இக்கல்லூரியை 2007ல் துவக்கினோம். சென்னையின் முக்கியப் பகுதிகளிலிருந்து இங்கு வந்து சேர கல்லூரியிலிருந்து ஐந்து பேருந்துகள் இயக்கப்படுகின்றன. அதுபோல் செங்குன்றம் பகுதியிலிருந்து இக்கல்லூரிக்கு வருவதற்கு இலவசப் பேருந்து வசதி செய்யப்பட்டுள்ளது. நம் பாரம்பரியத்தையும் கலாசாரத்தையும் போற்றிப் பாதுகாப்பதை ஒரு குறிக்கோளாகக் கொண்டு இக்கல்லூரி செயல்படுகிறது. நடை, உடை, பாவனை என எல்லாவற்றிலும் ஒரு துளி அளவுகூட நமது தமிழ்க் கலாசாரத்துக்குச் சீரழிவு வந்திடக் கூடாது என்பதில் அக்கறை காட்டி வருகிறோம். (அட கல்கியும் கோத்தி மாதிரிதாங்க!) செல்ஃபோன்களை கல்லூரிக்குள் கொண்டு வரலாம். ஆனால் வகுப்புகள் துவங்கிய பிறகு ஸ்விட்ச் ஆஃப் செய்யப்பட்டு இருக்க வேண்டும் என்பதில் கண்டிப்பாக இருக்கிறோம்.

கல்லூரியில் நடக்கும் விழாக்களின் ஒரு பகுதியாக ஸ்டால்கள் அமைத்து, பெண்கள் சுய முன்னேற்றக் குழுக்களின் பொருட்களை விற்க வாய்ப்புக்கள் கொடுக்கிறோம்.

செங்குன்றம் பகுதியில் சுற்றியுள்ள பல கிராமங்களைத் தத்தெடுத்து, அங்கு இலவச மருத்துவ முகாம்களை நடத்தி வருகிறோம். சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் எங்களது கல்லூரி மாணவிகள் அருகில் உள்ள கிராமப்புறங்களுக்குச் சென்று மாணவர்களுக்குப் பாடங்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள் என் பதையும் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறேன்'' என்றவர் தொடர்ந்து,

''+2 பொதுத் தேர்வில் அதிக அளவு மதிப்பெண்கள் வாங்கிய மாணவிகளுக்கு கல்விக் கட்டணத்தில் சிறப்புச் சலுகைகளை அளிக்கிறோம். இக்கல்லூரியின் பெயரில் ஒரு பேருந்து நிலையமும், அரசு பேருந்துகள் விரைவில் இங்கே இயக்கப்பட வேண்டும் என்பதும்தான் எங்களது அவா'' என்றார் முதல்வர்.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**



# நூற்றுக்கு நூறு ரீயூ

## - ரீமேக் டைரக்டர் செல்வா பே



**'நான் அவன் இல்லை' படத்தின் மூலம் ரீ-மேக்கில் வெற்றிக்கொடி நாட்டியவர் இயக்குநர் செல்வா. இப்போது கே.பாலச்சந்தரின் 'நூற்றுக்கு நூறு' படத்தை ரீமேக் செய்கிறார். அவருடனான சந்திப்புத் துளிகள் இதோ...**

**'நூற்றுக்கு நூறு'?**

''நூற்றுக்கு நூறு வழக்கமான ஆக்ஷன் மற்றும் பழிவாங்கும் போக்குகள் இல்லாத படம். ஓர் இளம் கல்லூரிப் பேராசிரியை, அவரிடம் படிக்கும் ஐந்து மாணவிகளால், தன் லட்சியத்தை நோக்கிப் பயணிக்கும் மாணவன் ஒருவனுக்கு ஏற்படும் இடையூறுகள், பிரச்னைகளைப் பற்றிப் பேசும் படம். இவற்றைத் தாண்டி அவன் தன் லட்சியத்தை அடைந்தானா? இல்லையா? மாறுபட்ட ஒரு கதையைச் சொல்ல முயன்றிருக்கிறேன்.''

**தமிழ்ப்படங்களில் ஒரு கதாநாயகிக்கே முக்கியத்துவம் இருக்காது. இதில் ஐந்து கதாநாயகிகள் ஏன்?**

''கதைச் சூழலுக்கு அது தேவைப்படுவதால் ஐந்து கதாநாயகிகள். இளம் கல்லூரிப் பேராசிரியராக நடிகை கஸ்தூரி இடம்பெற்றிருக்கிறார். அவருக்குக் கல்லூரியில் களங்கம் ஏற்படுகிறது. அதிலிருந்து அவர் தன்னை விடுவித்துக்கொள்ள செய்யும் தகிடுதத்தங்கள், கதையின் கிராஃபை உயர்த்தியிருக்கின்றன. பழைய 'நூற்றுக்கு நூறு' 'லக்ஷ்மி'யின் பாத்திரத்தில் 'ஸ்நேகா'வும், அவருடன் வெவ்வேறு கதாபாத்திரங்களில் நீலிமா, சந்தியா, கார்த்திகாவும் நடித்திருக்கின்றனர். இதில் சந்தியாவின் கதாபாத்திரத்துக்கு அழுத்தமான கதை சொல்லப்பட்டிருக்கிறது.

ஐந்து கதாநாயகிகள் என்றாலும் வெவ்வேறு சூழலும், பாத்திரங்களும் அவர்களை வேறுபடுத்தி அடையாளப்படுத்தும். ஒவ்வொருவரும் மாறுபட்ட கதாபாத்திரத்தை உடையவர்கள்.''

**ரீ-மேக் ஏன்? கதைகளுக்குப் பஞ்சமா?**

''நிறைய கதைகள் இருக்கின்றன. புதுமுக இயக்குநர்கள் புதிய வீரியத்துடன் வெவ்வேறு கதைகளைச் சொல்லி மக்களிடையே வரவேற்பையும் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். 'தலைவாசல்', 'அமராவதி', 'புதையல்', 'பூவேலி' இப்படி வெரைட்டியாக இருபத்திரண்டு படங்கள் இயக்கியிருக்கிறேன். ஒவ்வொன்றும் மற்றவற்றிலிருந்து மாறுபட்டதே! எனக்கு அதுதான் பிடித்திருக்கிறது.

பழைய படங்களை, ஏறக்குறைய முப்பது வருடங்களுக்கு முந்தைய படங்களைத்தான் நான் ரீ-மேக் செய்கிறேன். இளைய தலைமுறைக்குப் பிடித்திருப்ப



தால் அது தொடர்கிறது. இப்போதைக்கு எனக்குள் ஏற்பட்டிருக்கும் கதைக்கான இடைவெளியை ரீ-மேக் படங்கள்தான் நிரப்புகின்றன. மற்ற இயக்குநர்கள் மத்தியில் நான் என்னை நிலைநிறுத்திக் கொள்வதற்கு இவை உதவும். ஆனால் இது தற்காலிகமானதே!''

**கே. பாலசந்தர் என்ன சொன்னார்?**

'' 'நான் அவன் இல்லை' படத்தைச் சரியாகச் செய்திருக்கிறேன் என்று நினைக்கிறேன். அதனால்தான் இப்பட வாய்ப்பு. கே.பி.சார் மூலம் மீண்டும் அவரது கம்பெனிக்கே பண்ணும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது.

கதையின் கருவைச் சிதைக்காமல் வேறு எப்படி வேண்டுமானாலும் கதையை நகர்த்துவதற்கு அனுமதியும், முழு சுதந்திரமும் அவரிடமிருந்து கிடைத்திருக்கின்றன. கதையின் சூழலை இன்றைய காலகட்டத்துக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்திருக்கிறேன். வித்தியாசமாக ஏதாவது செய்ய வேண்டும், புதிய டிரெண்ட் செட்டராக ரீ-மேக் படங்கள் இருக்க வேண்டும். அதற்கேற்ற கதைகளைத் தேர்ந்தெடுத்து இயக்குகிறேன்.''

**புதிய அறிமுகங்கள் ஏன்?**

''இன்றைய இளம்தலைமுறையை அவர்கள் பிரதிபலிப்பதால் அவர்களைத் தேர்வு செய்கிறேன். தொடர்ந்து அறிமுக நாயகர்களை வைத்தே இயக்குவேன். அந்த அடிப்படையில்தான் நூற்றுக்கு நூறில் வினய்யைத் தேர்ந்தெடுத்தேன். என் சாய்ஸ் வளர்ந்து கொண்டிருக்கும் ஹீரோக்கள்தான்!''

**தமிழ்ப்படச் சூழல் குறித்து?**

''ஆரோக்கியமாக உள்ளது. புதிய இயக்குநர்களின் படங்களும் வெற்றி பெறுகின்றன. மக்களிடம் வரவேற்பு அதிகம் உள்ளது சிறப்பானதொரு தொடக்கம்...''

**- கிராபியென் ப்ளாக்**



# கல்கி




2009 பிப்ரவரி 1
சர்வதாரி தை 19
மலர் : 67
இதழ் : 27


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## உலகம் ஒபாமா கையில்!

ஒபாமாவின் தேர்வும் பதவியேற்பும் மட்டுமின்றி, அவரது சொற்பொழிவும் வரலாறு படைத்திருக்கிறது. லட்சக்கணக்கான அமெரிக்கர்கள் முன்னிலையில், துல்லியமான உச்சரிப்புடனும் தூய உள்ளத்துடனும் அவர் நெகிழ்ந்து பேசினார் என்பதை, தொலைக்காட்சி நேரடி ஒளிபரப்பு மூலம் உலகமே அறிந்துகொள்ள முடிந்தது.

உலகமே பார்த்துக் கொண்டிருக்கிறது என்பதனால்தானோ என்னவோ, ஒபாமா தமது உரையை அமெரிக்கர்களுக்காக மட்டுமின்றி உலகம் முழுவதற்குமாக அமைத்திருந்தார். குறிப்பாக, பயங்கரவாதத்தை வளர்க்கும் முஸ்லிம் நாடுகளை நோக்கி அவர் பேசியது உன்னதமாகவும் உறுதியாகவும் அமைந்தது. ''நீங்கள் மடக்கிய முஷ்டியைப் பிரித்து விரியுங்கள்; நாங்கள் நேசக்கரம் நீட்டத் தயார்!'' என்று கவி நயத்துடன் கூறினார்.

ஒபாமாவின் உரை முழுவதுமே ஆழமான மொழியும் அழகான கவிதை தெறிப்புகளும் கொண்டதாக அமைந்திருந்தது. அமெரிக்காவுக்கான அவரது கனவுகளும், உலக மேன்மைக்கான அவரது தொலைநோக்கும் செயல் வடிவம் பெறவேண்டுமானால் சிறந்த திட்டங்கள் உடனடியாகத் தேவை. அவை தீர்க்கதரிசனத்துடன்




திட்டப்பட்டு, தாமதமின்றிச் செயல்படுத்தப்பட வேண்டியதும் மிக அவசியம்.

அமெரிக்கப் பொருளாதாரம் மிகப் பின்னடைந்துள்ளதைத் தாம் முற்றிலும் உணர்ந்திருப்பதாகவும், பிரச்னைகள் விரைவில் தீராவிட்டாலும் நிச்சயம் தீரும் என்றும் ஒபாமா பேசியதைக் கொண்டு, உறுதியான திட்டங்களை அவர் ஏற்கெனவே வரைந்துள்ளார் என்று நம்பலாம். திட்டங்கள் வெற்றி பெற வாழ்த்தவும் செய்யலாம்.

ஆனால், அமெரிக்க வாழ்க்கை முறை, தனிமனித உரிமைக்கு அதிக முக்கியத்துவம் தருவதாக அமைந்திருப்பதால், அச் சமுதாயத்தில் பல சிக்கல்கள் எழுந்துள்ளன. அரசாங்கம் வரையும் திட்டங்கள் இந்தச் சிக்கல்களைச் சரிசெய்ய முடியாது. தனிமனித உரிமைகளின் துஷ்பிரயோகம், அதிகார துஷ்பிரயோகத்தைப் போலவே அபாயகரமானது. சுதந்திரமும் தனிமனித உரிமையும், பொறுப்புணர்வோடு கையாளப்படாவிட்டால் அழிவுக்கு வழிகோலும். அமெரிக்காவின் இன்றையப் பொருளாதார நலிவுக்கு அடிப்படையான காரணமும் தனிமனித உரிமைகளின் துஷ்பிரயோகம்தான். அதீதமான ஆடம்பர வாழ்க்கை முறையும் அதன் விளைவான கடன் கலாசாரமும்தான் இந்தப் பொருளாதார நெருக்கடிக்கு வழிவகுத்தன. - இதை அமெரிக்க நிபுணர்களே இன்று ஏற்கிறார்கள்.

ஆகவே, எளிமைக்கும் உயர் பண்புக்கும் தனிமனித தியாகத்துக்கும் ஒபாமாவின் வாழ்க்கையும் பணியும் முன்னுதாரணமாக அமைந்தால், அவரது ஆளுமையில் கட்டுண்டு கிடக்கும் அமெரிக்கர்கள் நிச்சயம் அவரைப் பின்பற்றுவார்கள். அமெரிக்கா விரைவில் மீண்டெழும். அமெரிக்கா சுதாரித்துக் கொள்கிறபோது, உலகப் பொருளாதாரமும் நெருக்கடியிலிருந்து விடுபடும். அமெரிக்கா மட்டுமல்ல; உலகமே ஒபாமாவை நம்பி இருக்கிறது! ○


சிரிப்பு புருஷன்!
"எனக்கு கோபம் வந்துச்சுன்னா, அப்புறம் நான் மனுஷனா இருக்க மாட்டேன்."
"இப்ப மட்டும் என்னவாம்!"

—அ.யாழினி பர்வதம்

# நிலாவைச் சுத்தும் சந்திராயன்



"நேத்துத் திருட வந்தவன் செம கடுப்புல போயிருக்கான்னு... எப்படிச் சொல்றீங்க?"
"பாரு. உடைச்ச பீரோவுல நீங்க நல்லாவே இருக்கமாட்டீங்கன்னு எழுதிட்டுப் போயிருக்கான்"
—ஆ.சேகர்



"அழுமூஞ்சி அழுமூஞ்சின்னு சின்ன வயசிலிருந்து திட்டினியே அதுக்குத்தான் இந்த பம்பர் பரிசு"
"புரியலையே..?"
"மெகா தொடர்ல நடிக்க வாய்ப்புக் கிடைச்சிருக்கு!"
—பூண்டி சேகர்



"எதிர்வீட்டுப் பையன் பேரு 'சந்திராயன்'னு சொல்றியே... ஏன்..?"
"பக்கத்து வீட்டு 'நிலா'வைச் சுத்திச் சுத்தி வர்றானே!"
—வெ.சீதாராமன்

# ஸ்மார்ட்டா ஒரு பெயர்!

'சிசுபாலன்'. அதுதான் அவன் பெயர். அவனை 'சிசு' என்றுதான் எல்லோரும் கூப்பிடுகிறார்கள். அக்கவுண்டன்ஸி பேராசிரியருக்குக் கொஞ்சம் கீச்சுக் குரல். பேச்சில் எப்போதும் ஒரு குழைவு இருக்கும். அவர், அவனைப் பெயர் சொல்லி அழைக்கிறபோது மட்டும் நெளிவான். பெண் பிள்ளைகள் அமர்ந்திருக்கிற பக்கம் கூச்சத்தோடு கண்ணை ஓட்டுவான். மாலதி பார்க்கிற பார்வையில் ஏளனம் தெரியும். இதழ்க் கோடியில் புன்னகை சுழித்து மையம் கொள்ளும். வகுப்பறையை விட்டுத் தலைதெறிக்க ஓட வேண்டும் போல இருக்கும் அவனுக்கு.

இந்தப் பெயர் அவஸ்தை பள்ளியில் அவ்வளவாக உறைக்கவில்லை. ப்ளஸ்டு படிக்கும் போது, இங்கிலீஷ் வாத்தியார் ஒரு நாள் கேட்டார்: 'என்னப்பா பேர் இது? கிருஷ்ணன், ராமன்னு வச்சாக்கூட ஒரு அர்த்தம் இருக்கு. சிசுபாலன்னு யாராவது பேர் வைப்பாங்களா?' அப்போதுகூட அவன் பொறுத்துக் கொண்டான். அதற்குக் காரணம் அவனில்லை. அவன் தந்தை பொன்னையன். அவருக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை. 'ராமன்னு பேரு வைக்கிறப்போ, ராவணன்னு ஏன் பேரு வைக்கக் கூடாது?' என்று வாதம் செய்கிறவர்.

இது என்ன பெயர்? அப்பா இப்படி ஒரு பெயரை வைத்து அவன் வாழ்க்கையில் அல்லவா விளையாடுகிறார்! கல்லூரிக்கு வந்து சேர்ந்த இந்த இரண்டு வருடங்களில் யாராவது அவன் பெயரைச் சொல்லி அறிமுகப்படுத்தும்போது கூச்சம் ஒரு கம்பளிப் பூச்சியைப் போல உடலெங்கும் ஊர்கிறது.

சிசுபாலனுக்கு இப்போது வேறொரு பிரச்னை. மாலதி. அவள் ஏன் இவ்வளவு அழகாக இருந்து தொலைக்க வேண்டும்? அவள் சிரிக்கும்போது இவனுடைய இதயத்தில் சிட்டுக் குருவி சிறகை அடிப்பது போல ஏதோ ஒன்று படபடக்கிறதே! அது ஏன்? ஒவ்வொரு வகுப்பிலும் கவனம் முழுக்க அவள் பக்கமே இருக்கிறதே... அது ஏன்?

'கெஜட்ல பேரை மாத்திடலாம்ப்பா.'

'என்னன்னு?'

'ஆகாஷ், பிரவீன், வினீத்... இப்படி ஏதாவது ஒண்ணு. ஆனா இந்த சிசுபாலன் மட்டும் வேண்டாம்.'

'போடா போக்கத்தவனே!'

அப்பாவிடம் ஏன் அவன் திட்டு வாங்க வேண்டும்? மாலதிக்காக. பெயரை மாற்றியாவது அவள் தன்னைக் கௌரவமாகப் பார்க்க வேண்டும் என்று அவன் ஏன் விரும்புகிறான்? ஒரேயொரு ஒற்றை வார்த்தைதான் பதில்.

காதல்.



■ பாலு சத்யா ■

அரவிந்த் அடிகாவைத் தெரியாத, பீட்ஸாவைத் தொட்டறியாத, காஃபி ஷாப்பில் மணிக்கணக்கில் உட்கார்ந்து கடலை போடுவதை நினைத்துப் பார்க்காத, அதி நவீன ஐநாக்ஸ் திரையரங்கின் வாசனையை நுகர்ந்து பார்க்காத கல்லூரி மாணவர்களும் இந்தத் தமிழ்நாட்டில் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களில் ஒருவன் சிசு.

தேனிக்குப் பக்கத்தில் ஒரு கிராமத்தில் வயலும் வயல்சார்ந்த நிலமுமாக வாழ்ந்து வருபவன். 'அட்டாச்ட் பாத்ரூம்' அறியாதவன். குளியலுக்கும் இதர கடன்களுக்கும் முல்லை ஆறு.

ஒரு காலத்தில் தேனிப் பக்கத்தில் கோலோச்சிய பருத்தி மார்க்கெட்டுக்கு இப்போது மவுசு இல்லை. சதா பருத்தி விளைந்த பொன்னையனின் வயல் மண்ணில் இப்போது கரும்பும் நெல்லும் தான் விளைகின்றன.

ராயப்பன்பட்டி ஹைஸ்கூலில் சிசு ப்ளஸ் டூ முடித்ததுமே பொன்னையன் சொன்னார். 'இந்தப் படிப்புப் போதும்டா. வயலைப் பாத்துக்கிட்டு வீட்டோட கெட.' சிசு கேட்கவில்லை. 'படிக்கிறவன்' என்கிற பதவிக்குப் பின்னால் இருக்கிற சுகமும் சுதந்திரமும் அவனுக்குத்தானே தெரியும்? இருபது கிலோ மீட்டர் தொலைவில் இருந்த ஒரு கல்லூரியில் பிடிவாதம் பிடித்து பி.காம். சேர்ந்துவிட்டான்.

அவன் கல்லூரிக்குள் நுழைந்த முதல் நாள், ராகிங் என்ற பெயரில் மூத்த மாணவர்கள் அவன் கையில் நாலணாவைக் கொடுத்து சில்லறை மாற்றி வரச் சொன்

னார்கள். இல்லாத கோழியை இருப்பதாகக் கற்பனை செய்துகொண்டு பிடித்து வரச் சொன்னார்கள். சிகவால் எதையும் பொறுத்துக்கொள்ள முடிந்தது. அவன் பெயரைத் தவிர. கல்லூரியில் சேர்ந்த முதல் வருடத்திலேயே அவன் யார் என்பதை மாலதிக்கு நிரூபிக்கிற சந்தர்ப்பமும் அவனுக்கு வாய்க்கத்தான் செய்தது. 'பிளானிங் ஃபாரம்' வடிவில்.

கபடியும், கிட்டிப் புள்ளும், காக்கைப் பொன்னும் விளையாடிய கிராமத்துக்காரன் சிகவுக்கு எப்போதுமே விளையாட்டுகளில் அலர்ஜி. 'மொட மொட' காக்கி உடுப்பைப் பார்த்தே என்.சி.சி.யைத் தவிர்த்தான். என்.எஸ்.எஸ். என்றால் மாதத்துக்கு ஒரு முறை சமூக சேவை செய்ய கிராமம் கிராமமாகப் போகவேண்டும். அப்பா அனுமதிக்க மாட்டார். அவனுக்கு உகந்த அமைப்பாக இருந்தது 'பிளானிங் ஃபாரம்' தான்.

பல இரவுகளில் அப்பாவுக்குத் துணையாக வயலுக்குக் காவலுக்குப் போய், 'எவன்டா அவன் இருட்ல நிக்கிறது?' என்று கத்திய புண்ணியமோ என்னவோ, குரலில் வளம்(!) இருந்தது. ஒவ்வொரு ஞாயிறும் அம்மாவின் சிறுவாட்டுக் காசில் தேனியில் பார்த்த சினிமாப் படங்களின் உபயத்தில் மிமிக்ரி போல எதையோ செய்வான்.

'பிளானிங் ஃபாரம்' அமைப்பில் மாலதியும் இருந்தாள். அமைப்புக்குப் பொறுப்பாளரான லெக்சரர் தினகரன் முதல் நாள் எல்லா மாணவர்களையும் அவரவர் திறமையைக் காட்டச் சொன்னார். ரமேஷ் மேடையில் ஏறி முழங்குவது போல உரையாற்றினான். சரவணன் பாட்டுப் பாடினான். ரேவதி பேப்பரைக் கொண்டு ஏதேதோ பொம்மைகளைச் செய்தாள். மாலதி திருக்குறளைத் தலைகீழாகச் சொன்னாள். சிக மிமிக்ரி செய்தான்.

'வணக்கம் மாமோய்...' என்று அவன் ஆனந்தராஜ் குரலில் பேச ஆரம்பித்த போதே மாணவர்கள் கை தட்ட ஆரம்பித்திருந்தார்கள். விஜய், ரஜினி, கமல், அஜித், விஜயகாந்த்... என்று ஒவ்வொருவராக உருமாறினான் சிக. ஒவ்வொரு கட்டத்திலும் மாலதி கை தட்டுவதையும் அவன் கவனித்தான்.

அதற்குப் பிறகு சாதாரணமாகவே வகுப்பிலும் வெளியிடங்களிலும் சக மாணவர்கள் சிகவிடம், 'மாப்ளே! ரகுவரன் மாதிரி பேசுடா!' என்று கேட்க ஆரம்பித்தார்கள். மாலதி அருகில் எங்காவது இருக்கிற சந்தர்ப்

• 'ராஜாதிராஜா' படத்தில்...



**இசையமைப்பாளர் கருணாஸ்!**

"என் மனைவி என்னைக் காதலித்தது, 'நான் பிற்காலத்தில் காமெடி நடிகனாகப் புகழ்பெறுவேன், அந்தப் புகழின் மூலம் வரும் சம்பாத்தியத்தை வைத்துக்கொண்டு சொகுசாக வாழலாம் என்பதற்காக அல்ல; என்னிடம் இருக்கும் இசைக்காக. எனக்குள் இருக்கும் மியூசிக் கம்போஸருக்காகத்தான் என்னைக் காதலித்தார். இல்லைன்னா என்னையெல்லாம் யார் ஸார் காதலிப்பா?'' லொடுக்கென்று கேட்கிறார் காமெடி நடிகர் கருணாஸ். அவரது மியூசிக் கம்போஸர் கனவு 'ராஜாதி ராஜா' படத்தின் மூலம் நினைவாகி இருப்

பங்களில் அவன் பொருத்தமான வசனங்களை அள்ளி வீசுவான்.

மாலதி ரசித்தாளே தவிர, அவனை நெருங்கவில்லை. அவன் பெயரைக் கேட்டாலே மாலதியிடமிருந்து ஒரு குறுஞ்சிரிப்பு வருவது தொடர்ந்து கொண்டுதான் இருந்தது.

சிசுவுக்கு 'சிமினி' ராஜன்தான் நெருங்கிய நண்பன். அவனிடம் ஒரு நாள் உள்ளதைச் சொல்லி பொருமினான் சிசு.

''இவ்ளோதானேடா மாப்ளை! பேசாம கிறிஸ்டியனாயிடு. அப்புறம் அவ திரும்பிப் பாக்கறாளா இல்லையா பாரு.''

அந்த யோசனை பிடித்திருந்தாலும் அம்மா கும்பிடுகிற குலசாமி அய்யனாரையும், அப்பா பொன்னையனையும் நினைத்தால் அவனுக்குப் பயமாக இருந்தது.

**''மாப்ள! நீ**

★ கருணாஸ்



பதில் இவரது மனைவி கிரேஸுக்கு மிகவும் சந்தோஷம். கருணாஸும் தமது நெருங்கிய நண்பர் பால்ஜேவும் இணைந்து 'ராஜாதிராஜா' படத்துக்கு இசையமைக்கின்றனர். இந்தப் படத்தில் 'எலந்தைபழம்' பாடலை ரீமிக்ஸ் பண்ணியிருக்கிறார்களாம்!

''முதல்முதல்ல பழைய பாடல்களை ரீ மிக்ஸ் பண்ணி மார்க்கெட்ல உலவவிட்டதே நான்தான் ஸார். என்னோட எல்லா ஆல்பத்துலயும் எதாவது ஒரு பாட்டு ரீமிக்ஸ் ஆகியிருக்கும். ஆனா, திரைப்படத்துல அதை நான் செய்யறதுக்குக் கொஞ்ச காலம் ஆயிடுச்சு. ஆனால், 'ராஜாதிராஜா' படம் மூலமா விட்ட இடத்தைப் பிடிச்சுட்டோம்ங்கற திருப்தி இருக்கு!'' என்கிறார் கருணாஸ்!

- புத்தன்

இப்போ மேஜர். உன் பேரை மாத்திக்க நீ யார்கிட்டயும் பெர்மிஷன் வாங்க வேண்டியதில்ல. இருநூறு ரூபாதான் செலவு. வக்கீல்கிட்ட எழுதிக் குடுத்தா போதும். அவரே பேரை கெஜட்ல மாத்தித் தந்துடுவார்.''

கல்லூரியில் செமஸ்டர் லீவு விட்டிருந்தார்கள். வீட்டில் ஏதோ பொய்யைச் சொல்லிவிட்டு, வக்கீலைப் பார்க்கத் தேனிக்குப் போனான் சிசு. 'புகழேந்தி' என்று பெயரை மாற்றச் சொன்னான். சுருக்கமாக 'புகழ்.' ரொம்பப் புதுசாக இருந்தது. திரும்பத் திரும்பப் பெயரைச் சொல்லிப் பார்த்துக்கொண்டான்.

பஸ் ஸ்டாண்டில் மாலதி நின்று கொண்டிருந்தாள். அவளாகவே இவனருகில் வந்து பேசினாள். வீட்டில் பொழுதுபோகாமல் தேனியில் இருக்கும் ரேவதியைப் பார்க்க வந்தாளாம். பொதுவாக ஏதேதோ பேசிக்கொண்டிருந்துவிட்டு அவள் தரையைப் பார்த்தபடி சொன்னாள்.

''நீங்க ரொம்ப நல்லா மிமிக்ரி பண்றீங்க.''

''தேங்க்ஸ்.''

''ஆளும் ஸ்மார்ட்டா இருக்கீங்க. அப்புறம்...''

''அப்புறம்?''

''உங்க பேரு...''

''அதுதான் பிடிக்கல. அப்படித்தானே?''

அவள் சட்டென்று நிமிர்ந்து, அவன் கண்களைப் பார்த்துச் சொன்னாள். ''இல்லல்ல. அதுதான் ரொம்பப் பிடிச்சிருக்கு. 'சிசு'ன்னு கூப்பிடுறதே ரொம்ப ஸ்டைலிஷ்ஷா இருக்கு. வர்றேன்'' என்றபடி சின்னமனூர் போகிற பஸ்ஸில் தாவி ஏறினாள் மாலதி. எப்போதும் போல அவள் இதழ்களில் அதே சிரிப்பு. ●

மார்கரெட் மிட்சலுக்கு இது முதல் நாவல் மட்டுமல்ல, இதுதான் கடைசி நாவலும் கூட. எழுதி முடிக்க, பத்து ஆண்டுகளுக்கு மேல் எடுத்துக்கொண்டிருக்கிறார்.

அட்லாண்டாவில் (ஜார்ஜியா) பிறந்தவர். ஆரம்பத்தில் ஜார்ஜிய ராணுவ அதிகாரிகளை நேரில் கண்டு பேசி, போர்க் கதைகளைத் தொகுத்திருக்கிறார். ஒன்றிரண்டு கதைகளோடு நிறுத்திக் கொள்ளலாம் என்று நினைத்துத்தான் எழுதினார். ஏகப்பட்ட வரவேற்பு. எடிட்டர், மார்கரெட் மிட்சலைக் கூப்பிட்டுச் சொல்லிவிட்டார். "பெண்ணே, இன்னும் நிறைய ராணுவத்தினரைச் சந்தித்துப் பேசு. இன்னும் நிறைய போர்க் கதைகள் கொண்டு வா."



* மார்கரெட் மிட்சல்

இந்தக் கதைகளில் இருந்து அறுபத்து நான்கைத் தேர்ந்தெடுத்து தனியே பின்னர் பதிப்பித்தார்கள். இந்த அனுபவம்தான் Gone with the Wind எழுதுவதற்கு அவருக்குப் பயன்பட்டிருக்க வேண்டும். சிறிய விபத்து ஒன்றில் சிக்கி, படுக்கையில் விழுந்த காலத்தில், மிட்சல் இந்த நாவலை எழுத ஆரம்பித்திருக்க வேண்டும் என்கிறார்கள்.



# மிலிட்டரி வாசனை!

ரகசியமாக எழுத வேண்டும் என்று அவருக்குத் தோன்றியிருக்கிறது. எழுதிக் கொண்டே இருக்கும்போது நண்பர்கள் யாராவது உள்ளே வந்தால், சட்டென்று காகிதங்களைப் படுக்கைக்குள் ஒளித்து வைத்துவிடுவார். என்ன எழுதுகிறாய் என்று யாராவது கேட்டாலும், ஒன்றுமில்லை சும்மா என்று சிரித்து மழுப்பியிருக்கிறார். கணவர் ஜான் மார்ஷுக்கு மட்டும் சிறப்பு அனுமதி. எழுதி எழுதி அவரிடம் கொடுத்துவிடுவார். ஜான் படித்து, திருத்தி, செப்பனிட்டு விடுவார். 1925 முதல் 1930 வரையிலான காலகட்டத்தில் நாவலின் பெரும்பகுதி எழுதப்பட்டிருக்க வேண்டும் என்கிறார்கள்.

1861 முதல் 1865 வரை அமெரிக்காவில் உள்நாட்டு யுத்தம் நடைபெற்றது. கொந்தளிப்பை அடக்க, அடிமைமுறைக்கு எதிரான போரைத் தொடங்கிவைத்தார் ஆபிரகாம் லிங்கன். 1865ல் சுட்டுக் கொல்லப்பட்டார். ஆறு லட்சத்துக்கும் அதிக

## உலகை உலுக்கிய புத்தகங்கள்!

மாணவர்கள் கொல்லப்பட்டனர். போரின் விளைவால் பாதிக்கப்பட்ட எண்ணற்ற அமெரிக்கர்களுள் மார்கரெட் மிட்சலும் ஒருவர். அரசியல், சமூகக் காரணிகள் அனைத்




தும் ஆராயப்பட்டு பல நூல்கள் வெளிவந்தன. ஆனாலும் சொல்வதற்கு இன்னும் என்னவோ மிச்சம் இருக்கிறது என்று மிட்சலுக்குத் தோன்றியது.

போரின் வலியை சரித்திரத்தில் பதிவுசெய்துவிட முடியாது. சாமானியர்களின் உள்ளங்களைத் தொட வேண்டுமானால், கதை தேவை. அதே சமயம், முழுக்க முழுக்க கற்பனைக் கதையாகவும் அது இருந்துவிடக் கூடாது. அசல் பின்னணி. கற்பனைக் கதாபாத்திரங்கள். இரண்டும் முட்டி மோதும்போது, அபாரமான ஒரு கலவை கிடைக்கிறது.

ஸ்கார்லெட்டை உருவாக்கினார் மிட்சல். வசதியான பின்புலத்தில் வாழ்ந்து, வளர்ந்த ஒரு பெண். போர் எப்படி அவரைத் தாக்குகிறது? என்னென்ன மாற்றங்களை ஏற்படுத்துகிறது? எப்படி ஒரு குடும்பத்தை அது அலைக்கழிக்கிறது? போர் நடைபெறும் சூழலில் காதல் சாத்தியமா? நட்பு சாத்தியமா? உறவுகள் சாத்தியமா? நான், என் வீடு, என் குடும்பம், என் கனவு என்று ஒருவரால் இருந்துவிட முடியுமா?

1936ல் இந்நாவல் வெளிவந்தபோதே, பலத்த வரவேற்பு. இந்நாவல் நிச்சயம் காலத்தைக் கடந்து நிற்கும் என்று விமர்சகர்கள் கொண்டாட ஆரம்பித்தார்கள். 1937ம் ஆண்டு மிட்சலுக்கு புலிட்ஸர் விருது கிடைத்தது. இரண்டு ஆண்டுகள் கழித்து இந்நாவல் படமாக்கப்பட்ட போது, பத்து அகாதெமி விருதுகள் கிடைத்தன. அமெரிக்க இலக்கிய வரலாற்றில் அழிக்க முடியாத ஓரிடத்தைப் பெற்று இன்று வரை காற்றோடு கரைந்து நிற்கிறது.

மறுவாசிப்பு செய்யும்போது, சில குறைகள் தட்டுப்படுகின்றன. கறுப்பினத்தவர் குறித்து ஸ்கார்லெட் முன்வைக்கும் சில விமர்சனங்கள், அவர்களைக் குறிக்கப் பயன்படுத்தும் சில பதங்கள் முறையற்றவை. வெள்ளை இனவெறி உச்சத்தில் இருந்த அந்தக் காலகட்டத்தின் குழந்தையாகத்தான் ஸ்கார்லெட் இருந்திருக்கிறார் என்பது புரிகிறது. இதே நாவலில் வரும் சில கறுப்பினக் கதாபாத்திரங்கள் மீது ஸ்கார்லெட் மதிப்பு வைத்திருந்தார் என்பது உண்மைதான். என்றாலும், அவரது பொதுவான அபிப்பிராயம் வெள்ளையர்களை விடக் கறுப்பர்கள் தாழ்ந்தவர்கள் என்பதுதான். இது விமர்சனத்துக்குரியது, கண்டனத்துக்குரியதும்கூட.

**மருதன்**




''இந்தக் கல்லும் மண்ணும்தாங்க எங்க ஆளுங்களுக்குச் சோறு தண்ணி போடுது. ஊர் ஊராப் போயி கேணி வெட்டறது, கட்டடம் கட்ட அஸ்திவாரம் பறிச்சுத் தர்றது... இதான் எங்க பரம்பரைத் தொழில். எங்க சனங்க எந்த ஊர்ல போயி செத்துட்டாலும், பூர்வீகக் கிராமத்துல ஒரு கல் எடுத்து வெச்சு சாமி கும்பிடுவோம். இப்படி ஒவ்வொரு கல்லா அடுக்கி வெச்சதுதான், இப்ப சின்னக் குன்று போல கண்ணுக்குத் தெரியுது. அதை வேடிக்கை பார்க்கிறவங்க வெளிநாட்டுல பார்க்கற 'பிரமிடு' கணக்கா இருக்குதுங்கறாங்க. எங்களுக்கு அந்த வெவரமெல்லாம் தெரியாது. நாங்க அதுகளை 'குட்டாங்கல்லு'ன்னுதான் சொல்வோம்!'' என்கின்றனர் போயர் இனப் பொதுமக்கள்.

சேலம் மாவட்டம்தான் போயர் இன மக்களின் புகலிடம். இரண்டாயிரம் போயர் இன மக்கள் வசிக்கும் ஆத்தூர் தாண்டவபுரத்தின் ஊர் எல்லையில் ஆற்றங்கரையோரமாக வரிசையாக அமைந்துள்ளன குட்டாங்கல்லு அமைப்புகள். ''எங்களுக்கு இதுதான் குலதெய்வம். உசுரு. ஒரு குடும்பத்துல நல்லது - கெட்டதுன்னாலும், கோயில் திருவிழான்னாலும் முதல்ல குட்டாங்கல்லு போயி சாமி கும்பிட்டுவந்துதான் ஆரம்பிப்போம். செத்துப்போனவங்க ஒவ்வொரு கல்லுலயும் கரைஞ்சு நின்னு எங்களைக் காப்பாத்துறதா... வழிநடத்தறதா நம்பிக்கை!'' என்கிறார் சின்னம்மாள்.

ஆளுயரத்துக்கும் மேலாக எழும்பி நிற்கும் ஒவ்வொரு குட்டாங்கல்லிலும் நூற்றுக்கணக்கான கற்கள். ஒவ்வொரு கல்லும் ஒரு குடும்பத்தின் இறந்தவர் நினைவாக எடுத்து வைக்கப்பட்டதாகும். சேலம் மாவட்டத்தின் பழனியாபுரம், மேட்டூர், தாண்டவராயபுரம், கொளத்தூர் சுற்று வட்டாரப் பகுதிகளில் போயர் இன மக்கள் அதிகமாக வசிக்கின்ற கிராமங்களில் பிரமிடு வடிவிலான 'குட்டாங்கல்'லைக் காணலாம்.

குட்டாங்கல்லின் இன்னொரு ரகசியம். கல்யாணம் ஆகாமல் இறந்து போகும் ஆண்கள் - பெண்கள், சிறுவர்கள் - சிறுமிகள் - குழந்தைகள் இறப்பு ஆகியன குட்டாங்கல் அமைப்பில் இடம்பெறுவதில்லை. திருமணம் ஆனவர்கள் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் அவர்கள் இறந்து போனால் மட்டுமே, குட்டாங்கல்லில் இடம்பிடிக்கத் தகுதியுள்ளவர்கள்.

''எங்க ஆயி அப்பனுக்கெல்லாம் ஊரு

# சேலத்தில்



✱ சின்னம்மாள்



✱ பச்சையம்மாள்



✱ தேவராஜ்



✱ ரேகா

ஊராப் போயி கேணி தோண்டுறது, வாணம் பறிக்கறதுதாங்க பொழப்பு. இந்த ஊருல மூணு மாசம், அந்த ஊருல மூணு மாசம்னு நாடோடி மாதிரி ஓடிக்கிட்டே இருப்போம். இதனால் எங்க இனத்துல படிப்புங்கறதே இல்லாமப் போச்சு. எனக்கு வயசு பதினாறு ஆவுது. இன்னும் பள்ளிக்கூடம் பக்கம் போனது கூட இல்ல!'' என்கிறார் ரேகா.

''எனக்குக் கண்ணாலம் ஆகி அறுவது வருசம் ஆவுது. இந்த ஊருக்கு நான் வர்றதுக்கு முன்னாலேர்ந்து இந்தக் குட்டாங்கல் வழிபாடு நடந்துக்கிட்டிருக்கு. ஸ்கூல் படிப்புக்கும் எங்க புள்ளைங்களுக்கும் ரொம்பத் தொலைவு. இப்பத்தான் அதிசயமா ஒண்ணு ரெண்டு பச்சப் புள்ளைங்க இங்கிலீஷ் மீடியம் ஸ்கூலுக்குப் போய்ட்டு வருதுங்க. எம் பேரனும் பேத்தியும் ரிக்‌ஷாவுல போய்ட்டு வர்றாங்க'' - இது பச்சையம்மாளின் ஸ்டேட்மென்ட்!

''போயர் இனத்துல பதினெட்டு பிரிவு. சிவ வழிபாடு உள்ளவங்க, பெருமாள் வழிபாடு உள்ளவங்க - ரெண்டு பிரிவு ஆளுங்கதான் இந்தப் பக்கமா இருக்கோம். எந்தப் பிரிவா இருந்தாலும் 'குட்டாங்கல்' வழிபாடு எல்லார்க்கும் பொது. கோயில்ல பெரிய திருவிழாவுக்குக் காப்பு கட்றதுக்கு முன்னாடி 'குட்டாங்கல்' போயி சாமி கும்பிட்டு வந்துதான் காப்பு கட்டுவாங்க. ஆடிப்பெருக்கு, புரட்டாசி கடைசி சனி, பொங்கல் பண்டிகையப்ப எங்காளுங்க 'குட்டாங்கல்' வழிபாடு செய்வாங்க. கண்ணாலம் ஆனவங்க இறந்துட்டா வீட்லேர்ந்து அவங்களை எடுத்திட்டுப் போவும்போது, அங்னைப் போயி அவங்க நெனைப்பா ஒரு கல்ல எடுத்து வெச்சு வழிபட்டுட்டுத்தான் சுடுகாட்டுக்கு சடலத்தைக் கொண்டு போவோம்!'' என்கிறார் தேவராஜ்.

- திருநாவு

# 'சின்ன பிரமிடு!'

கவிஞர் பழமலய்க்கு சமீபத்தில் தமிழக அரசு கி.ஆ.பெ. விசுவநாதம் விருதும், ரூபாய் ஒரு லட்சமும் தங்கப்பதக்கமும் வழங்கிக் கௌரவித்தது. விழுப்புரத்தை வசிப்பிடமாகக் கொண்ட பழமலய், இதுவரை 'சனங்களின் கதை', 'குரோட்டன்ஸ்களோடு கொஞ்சநேரம்' உள்ளிட்ட ஒன்பது கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். 'பாம்புகள்' - இவரது சிறுகதைத் தொகுப்பு.





# "நவீன இலக்கியத்தைத் தடை செய்வோம்!"

## -கவிஞர் பழமலய் கோபம்...

விருது குறித்தும் தமிழ் இலக்கியச் சூழல் குறித்தும் அவர் நம்மோடு பேசியதிலிருந்து சில துளிகள்...

*விருதுக்குக் காரணம் அரசியலா? ஜாதி ஒதுக்கீடா? திறமையா?*

''என் திறமை மீது எனக்கு ரொம்ப நம்பிக்கை உண்டு. எனக்கு இன்னும் கூடுதலான பரிசுகள் வந்திருக்க வேண்டும். இந்தப் பரிசு திறமைக்கானதுதான். இல்லை! இது சாதிக்கான ஒதுக்கீடு என்று சொன்னால் அதையும் வரவேற்பேன். பரிசு என்பது தகுதியைப் பெற்றதற்கும் எதிர் காலத்தில் தகுதியைப் பெறுவதற்குமான தும்தான். கலைஞர், இட ஒதுக்கீட்டு அரசியலில் நம்பிக்கையுள்ளவர்தானே. எனவே, அரசியலும் இருக்கக்கூடும். அதுவும் ஆதரிக்கக்கூடியதே!''

*நீங்கள் மண்ணின் கவிஞரா? 'வன்னிய' கவிஞரா?*

''மண்ணின் மணம் என்றாலே அது சாதி மணம்தான் - விதவிதமான சாதி - விதவிதமான வாழ்வின் பதிவு. சமூகப் பிரச்னை என்பதும் சாதிப் பிரச்னைதான். வர்க்கப் புரட்சிகூட சாதியிலிருந்து துவங்க வேண்டும். அதிகாரத்தை நோக்கி நகர்வது அவசியமானது. இலக்கியத்தின் அரசி

யலும் அதுதான். இட ஒதுக்கீட்டில், உரிமையைப் பெறுவதில் எந்தச் சாதியும் ஏமாற்றம் அடையக்கூடாது. எல்லா சாதிக்கான இலக்கியப் பயன்பாடும் இதுவாக இருப்பதில் என்ன தவறு?''

***இலக்கியவாதிகளின் சினிமா விஜயம் ஆரோக்கியமானதா?***

''அதைக் கொச்சையாகப் பார்க்க வேண்டியதில்லை. ஆயினும், இலக்கியக் கவிஞர்கள் சினிமாவில் தம் ஆன்மாவை விற்றுவிடுவது வருத்தத்துக்குரியது.



சினிமா ஊடகத்தில் நாம் சமரசம் செய்து விலை போகிறோமா... இல்லை சமூகத்துக்காகப் போர் புரிகிறோமா என்பதுதான் கேள்வி. சினிமாவில் சூழலுக்குப் பாட்டெழுதுவது என் வேலையல்ல - சூழலை உருவாக்க முயல்வதுதான் கவிஞனின் வேலை.''

***மேலாண்மை பொன்னுசாமிக்குக் கிடைத்த சாகித்ய அகாடமி விருதை, சாரு நிவேதிதா லாட்டரி பரிசு என்கிறாரே?***

''ஒன்றைப் போட்டு ஒன்றை மட்டுமே எடுப்பது லாட்டரி பரிசு அல்ல. பலநூறு சீட்டுக்களைப் போட்டு ஒன்றைத் தேர்ந்தெடுப்பதுதான் லாட்டரி. இந்தக் குலுக்கலில்... ஒதுங்கிப்போன பலநூறு சீட்டுகளில் சாருவும் ஒருவர். நாளை சாருவுக்கு சாகித்ய அகாடமி பரிசு கிடைத்தால் அதுவும் லாட்டரியா? இவர் லாட்டரி வேண்டாம் என்பாரா? அந்தப் பரிசை நான் ஒருபோதும் லாட்டரி என்று சொல்ல மாட்டேன்.''

***நீங்கள் பொறுப்பிலிருக்கும், தமிழ் பண்பாடு, கலாசாரம் பேசும் பா.ம.கவின் பொங்கு தமிழ் இயக்கம்... நவீன இலக்கிய உலகில் புழங்கும் ஆபாச 'போர்னோ' இலக்கியங்களைப் பற்றிக் கவனிக்கிறதா?***

## "இலக்கியத்திலும் இட ஒதுக்கீடு அவசியம்தான்!"

''மது, புகையிலை போன்ற தனி நபர் நுகர்வும், கருத்தும் சமூகத் தொல்லையாக மாறியதால், அதைத் தடைசெய்யக் கோருகிறோம். கலகமாக, கவன ஈர்ப்பு முயற்சியாக, போலி இலக்கியமாக வரும் சில நவீன இலக்கிய நூல்கள், மறைமுகமான சமூகத் தொல்லையாக மாறி, தமிழ்ப்பண்பாட்டைச் சிதைக்குமேயானால் அந்நூல்களைத் தடை செய்யலாமா என யோசிப்போம். வருங்காலத்தில் இவ்விஷயத்தில் கூடுதல் கவனம் ஏற்போம்.''

**- அமிர்தா**

ச.ந.கண்ணன்


* சச்சின்

# ஐ.சி.சி. காமெடியன்!

இந்த முறை ஸ்ரீலங்கா சுற்றுப் பயணத்துக்கான தேர்வுப் பட்டியலால் பெரிய கூச்சல் குழப்பங்கள் எதுவும் நிகழவில்லை. ஆனால் வீரத் கோலியை நீக்கியது மட்டும் யோசிக்க வைக்கிறது. சில மாதங்களுக்கு முன்பு இந்திய அணி ஸ்ரீலங்காவுடனான ஒருநாள் தொடரை வென்றபோது வீரத் கோலி நம்பிக்கை நட்சத்திரமாகக் கணிக்கப்பட்டார். பிறகு எந்தவொரு வாய்ப்பும் வழங்கப்படாமல் இன்று உதாசீனப்படுத்தப்பட்டுள்ளார். பரவாயில்லை. கோலி இதுபோல நூறு முறை விழுந்து எழலாம். வயதிருக்கிறது. இந்தியக் கிரிக்கெட்டில் தன்னை நுழைத்துக்கொண்ட ஒரு வீரர், கண்டமேனிக்குச் சிராய்ப்பு ஏற்படாமல் ஜீவிப்பது கடினம். அது இப்போதும் நிரூபணம் ஆகியிருக்கிறது.

விவேக், வடிவேலு போல ஐ.சி.சி.யும் ஒரு நிகரில்லா காமெடியன்தான். இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை வாய்விட்டுச் சிரிக்கும்படியான ஒரு காரியத்தைச் செய்துவிட்டு, ஒன்றும் தெரியாததுபோல நிற்கிறது. இந்த முறை டக்வொர்த் லூயிஸ் மழை விதிமுறைக்கு இணையாக, புரியாத


* இளவழகி


* விஸ்வநாதன் ஆனந்த்

ஒரு சர்வதேசத் தரப்பட்டியலை வெளியிட்டு நன்றாக வாங்கிக்கட்டிக் கொண்டிருக்கிறது. சிறந்த சர்வதேச வீரர்கள் பட்டியலில் தெண்டுல்கரின் பெயர் முதல் இருபது இடங்களில் இடம்பெறவில்லை என்றவுடன், ஆளாளுக்குக் கல் எடுத்துவிட்டார்கள். ஐ.சி.சி. இதற்கு வழவழா கொழகொழாவென்று ஒரு விளக்கம் கொடுத்தாலும், யாரும் அதைக் கண்டுகொள்ளவில்லை. இந்தியாவில் இப்போது எந்தக் கிரிக்கெட்டும் நிகழாத நிலையில் ஐ.சி.சி. இதுபோல

அச்சுபிச்சாக நடந்துகொண்டதால், மீண்டும் கிரிக்கெட் தலைப்புச் செய்திகளில் இடம்பிடித்திருக்கிறது.

**பா**லங்கள் என்றால் தி.மு.க. ஆட்சி ஞாபகத்துக்கு வருவதுபோல, விளையாட்டுக்கு நாலு நல்ல காரியங்கள் செய்தவர் என்றால், இன்றைக்கும் ஜெயலலிதாவின் பெயர்தான் முன்வைக்கப்படுகிறது. அவர் ஆட்சியில் கட்டப்பட்ட அரங்குகளில்தான், சென்னை ஓப்பனும் இதர சர்வதேசப் போட்டிகளும் நடைபெற்று வருகின்றன. விளையாட்டு வீரர்கள் அழுகுரலில் கொடுக்கிற பேட்டிகள் தொடர்ந்து பத்திரிகைகளில் இடம்பெற்று வருவதை அரசு பரிசீலிக்கிறதா என்று புரியவில்லை. கைலூன்றிக் கரணம் போட்டு, தலைப்புச் செய்திகளில் இடம்பிடிக்கும்போதுதான், இப்படியொரு விளையாட்டு வீரர் நம் மாநிலத்தில் வாழ்ந்து வருகிறார் என்கிற பிரக்ஞை ஏற்படுகிறது. இந்திய டென்னிஸ் வீரர்கள் அமெரிக்கா சென்று பயிற்சி எடுத்து முன்னேறிக் காட்டுவது போல அத்லெடிக் வீரர்களால் முடியாது. தனியார் அமைப்புகள் கொடுக்கும் ஊக்கத்தினால் மட்டுமே தமிழகத்தில் நிறைய சாதனையாளர்கள் உருவாவது சாத்தியமாகி வருகிறது. இன்னொரு ஆனந்த், இளவழகி வேண்டுமென்றால் நீண்ட கால யோசனையும் கனிவான இதயமும் அவசியம். ஆனால் விளையாட்டில் முன்னிலை வகிக்க அரசு என்னென்ன திட்டங்கள் வைத்திருக்கிறது என்று தெரியவில்லை. பாலம் கட்டிக்கொண்டிருந்தால் மட்டும் தமிழகம் முன்னேறிவிடாது. ●



● விராத்கோலி

# ஆயிரத்தில் ஒருவன்

கனமான நோட்டுப் புத்தகங்களை வைத்துக்கொண்டு, கணக்கு பிள்ளைகள் கண் வலிக்க எழுதிய காலம் எப்போதோ மலையேறி விட்டது. இப்போது விரல் நுனியில் தட்டி விட்டால், எல்லா விவரங்களும் பளிச்சிடுகின்றன. பள்ளியிறுதி வகுப்பு படித்திருந்தால் மட்டும் போதும்; ஏதாவது ஒரு நிறுவனத்தில் குமாஸ்தாவாகச் சேர்ந்து அக்கவுண்ட்ஸ் பார்த்து காலத்தை ஓட்டி விடலாம் என்ற மனப்பான்மை 30, 40 வருடங்களுக்கு முன்பு இருந்தது. பின்னர், குறைந்த பட்சம் ஒரு பட்டப் படிப்பு தேவை என்ற நிலை ஏற்பட்டது. அப்படியிருந்தால் மட்டும் போதாது; அந்தப் பட்டப் படிப்பும் பி.காம்., என்று இருந்தால் மிகவும் நல்லது என்ற நிலை ஏற்பட்டது. ஆயிரக்கணக்கான இளைஞர்கள், பி.காம்., படித்துவிட்டு வங்கிப் பணிகளில் சேர்ந்தார்கள். அப்படி ஒரு வங்கி வேலை கிடைக்கவேண்டும் என்றுதான் படிப்பை முடித்தார் அகிலா.

திருச்சி கல்லூரியில் பட்டப்படிப்பு முடித்த பிறகு திருமணம் ஆகிவிட்டது. கணவன் சீனிவாசனிடம் தமக்கு நிதி, வர்த்தகம் தொடர்பாக மேல் படிப்பு படிக்க ஆசை என்று தெரிவித்தார். அவரும் ஓ.கே. என்று சொல்லிவிட அதற்கான முயற்சிகளில் இறங்கினார். ஆனால், குடும்ப வாழ்க்கையில் இரண்டு குழந்தைகளையும் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு, அவரது படிப்பார்வத்தைத் தள்ளிப் போட்டது. குழந்தைகள் ஒரு நிலை வரை வளர்ந்த பிறகு, தமது படிப்பைத் தொடர்ந்து முடித்தது மட்டுமல்லாமல், பொருளாதாரத்தில் ஆராய்ச்சிப் பட்டமும் பெற்றார்.



'மாஃபா' பாண்டியராஜன்

இந்தச் சமயத்தில்தான் ஸ்ரீராம் குழுமத்தில் எக்ஸிக்யூடிவ் டிரெய்னி தேவை என்ற விளம்பரம் வந்தது. நம்பிக்கையோடு விண்ணப்பித்தார். ஆயிரக்கணக்கானவர்கள் நேர் முகத் தேர்வுக்கு வந்தார்கள். இறுதியில் பன்னிரண்டு பேர் தேர்வானார்கள். அதில் அகிலாவும் ஒருவர். ஸ்ரீராமில் இளநிலைப் பணியில் சேர்ந்த அகிலா, கூடிய விரைவில் நிறுவனத்துக்கு ஒரு சொத்தாக மாறினார். இதற்குக் காரணம் அவரது கடும்உழைப்பு. மானேஜர், ஜெனரல் மானேஜர் என்று பொறுப்புகளும் ஏற்றம் பெற்றுக் கொண்டே வந்தன. நிறுவனம் முதலீட்டுத் துறையில் இறங்கியபோது, அதன் முதுகெலும்பாகப் பணியாற்றினார் அகிலா. நிறுவனங்கள், தாங்கள் பெறும் டெபாஸிட்டுகளை கடன்கொடுத்தால்தான் அவற்றுக்கு வருமானம். ஆனால் அப்படிக் கொடுக்கப்படும் கடன் திருப்பி வராமல் போகுமானால், நிறுவனம் கவிழ்ந்துவிடும்.

ஸ்ரீராம் வாகனக் கடன்களுக்கு மிக முன்னுரிமை கொடுத்து வந்தது. ஏற்கெனவே பல வாகனங்களை வைத்திருப்பவர்களுக்கு கடன்கொடுத்து வசூலிப்பது என்பது சற்றுச் சுலபமான காரியம். ஆனால், புதிதாகத் தொழில் துவங்க முனைவோர் கடன் கேட்கும்போது, கொடுப்பதில் ரிஸ்க் இருக்கிறது. ஆனால், அகிலா துணிந்து, அப்படிப்பட்டவர்களுக்கும் கடன் கொடுத்து பல புதியவர்களைத் தொழிலில் பிரகாசிக்கச் செய்தார். குறிப்பாக, நாணயமுள்ள மனிதர்களை அடையாளம் கண்டு, கடன் கொடுத்து உற்சாகப் படுத்தினார். இதனால் வாடிக்கையாளர்களும் அதிகமானார்கள், நிறுவனத்துக்கு வருமானமும் பெருகியது. அகிலா சீனிவாசனின் உழைப்




# நிதி, செய்யாது சதி!

பால் நிறுவனம் முன்னணிக்கு வந்ததால், அவரை ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் நிறுவனத்துக்கு நிர்வாக இயக்குனராகவே நியமித்து விட்டார்கள். இப்போது நிறுவனம் வெற்றிநடை போட்டுக் கொண்டிருக்கிறது.

நிதித்துறையில் மிகத் துவக்கநிலையில் சேர்ந்து அகிலா சீனிவாசன்போல உயரே போவதற்கான வாய்ப்புகள் இப்போதைய காலகட்டத்தில் ரொம்பவும் பிரகாசமாகவே இருக்கின்றன. இப்போது நிதித்துறை பல பிரிவுகளாக, காலத்துக்கேற்றபடி மாற்றங்களைச் சந்தித்து வருகிறது. வர்த்தக வங்கித் துறை, குழும நிதி மேலாண்மை, நிதி திட்டமிடுதல், காப்பீடு, முதலீட்டு வங்கி, பண மேலாண்மை என்று பிரிவுகள். வெறும் பி.காம்., படித்தால் மட்டும் போதாது. மேலே எம்.பி.ஏ.வும் இருந்தால் துவக்க நிலையில் இருபதாயிரம் சம்பளத்தில் ஒரு எக்ஸிக்யூடிவ்வாகச் சேர முடியும். வங்கி, காப்பீடு துறைகளில் வேலை நிச்சயம்.

இந்தியாவில், நமது நாட்டு காப்பீட்டு நிறுவனங்களைத் தவிர வெளிநாட்டு நிறுவனங்களும் கூட்டு சேர்ந்து பல நிறுவனங்கள் செயல்படுகின்றன. ஆயுள் காப்பீடு மற்றும் உடல்நலக் காப்பீடு பற்றிய விழிப்புணர்வு அதிகமாகிக் கொண்டே வருகிறது. உலக அளவில் இந்த வகையில் நமது நாடு ஐந்தாவதாக இருக்கிறது. அடுத்த இரண்டாண்டுகளில், மூன்றாவதாக வந்துவிடும். எனவே நிதித்துறை, நிதி நிர்வாகம், நிதி மேலாண்மை ஆகியவற்றை சிறப்புப் பாடமாக எடுத்து, பட்டமேற்படிப்பு படிப்பவர்களுக்கு வாய்ப்புகள் நிறையவே உண்டு. அதே சமயம் ஃபைனான்ஷியல் கன்ஸல்டண்ட் போன்று சுயதொழில் செய்யவும் வாய்ப்பு உண்டு. காப்பீடு, மியூச்சுவல் ஃபண்ட், பங்கு பத்திர முதலீடு என்ற



# பாண்டி 'S BLOG

கடந்த ஆண்டு அடித்த பொருளாதார வீழ்ச்சிப் புயலில் சிக்கிய கப்பலாக இருக்கும் வங்கிகளில் சிட்டி வங்கியும் ஒன்று. சரிவிலிருந்து வங்கியை மீட்டெடுக்க வேண்டும். இக்கட்டான சூழலில் இந்தியரான தலைமை நிர்வாக அதிகாரி விக்ரம் பண்டிட்டுக்குப் பெரிய சவால் காத்துக் கொண்டிருக்கிறது.

உலகம் முழுக்க கிளைகளைக் கொண்ட சிட்டி வங்கியில் கிட்டத்தட்ட இரண்டரை லட்சம் ஊழியர்கள் வேலை செய்கிறார்கள். சென்ற வருடம் 52,000 ஊழியர்களுக்கு 'டாடா' காண்பித்த பிறகு உள்ள நிலவரம் இது. இந்தியாவில் 107 வருடங்களாக சிட்டி வங்கி இருந்தாலும், 1990களுக்குப் பிறகே, தனது பல சேவைகளின் மூலம் நடுத்தட்டு மக்களைச் சென்றடைந்தது.

வங்கி வர்த்தகம், கிரெடிட் கார்டு, வீட்டுக்கடன், வாகனக் கடன், சிறு கடன்கள், சொத்துக்கள் மேலாண்மை... என்று நிதித்துறையின் சகல அம்சங்களையும் உள்ளடக்கிய ஒரு சூப்பர் மார்க்கெட்டாகவே சிட்டி குழுமம் இருந்தது. ஆனாலும், வீடு, வாக னங்கள் மீது கொடுத்த கடன்கள் திரும்பி வராததாலும், சொத்துக்களின் மதிப்பீடு வீழ்ந்து விட்டதாலும், சிவப்புக் கொடி காண்பிக்க வேண்டியதாகி விட்டது. பாரம்பரிய வங்கி வர்த்தகம் தொடர்பான சேவைகள் லாபத்தில் இயங்கினாலும், 'வாராக் கடன்கள்' காரணமாக மொத்தக் குழுமமும் நஷ்டத்தில் இயங்கத் துவங்கியது. எனவே, வங்கிச் செயல்பாடுகளை இரண்டாகப் பிரித்து விட்டார்கள். இனி சிட்டி கார்ப்பரேஷன் என்ற நிறுவனத்தின் பெயரில் பாரம்பரிய வங்கி வர்த்தகமும், கிரெடிட் கார்டும் செயல்படும். சிட்டி ஹோல்டிங்ஸ் என்ற பெயரில் நுகர்வோர் கடன் போன்றவை கையாளப்படும். இந்தியா வில் சில்லறை கடன்களுக்காகச் செயல்படும் சிட்டி ஃபைனான்ஷியல் மற்றும் சிட்டி மாருதி மூடப்படலாம். நஷ்டமடைந்து வரும் ஒரு பிரிவைத் தனிமைப்படுத்துவதன் மூலம் கொடிக் கப்பலான (flag ship) சிட்டி வங்கியைக் காப்பாற்றும் முயற்சி இது.



பல வகைகளில் மக்களுக்கு ஆலோசனை கூறும் வேலை தான் இவர்களுடையது. உள் நாட்டு வேலை வாய்ப்பைத் தவிர, வெளிநாட்டு நிறு வனங்களும் நிதி நிர்வா கத்தை நமக்கு அவுட்ஸோர்ஸ் செய்து வருவதால், அந்த வகையில் 38 சத விகிதம் பணிகள் நமது பி.பி.ஓ.க்களால் செய்யப்படுகின்றன. 2010ம் வருடத்தில் அமெரிக்க வங்கி நிறுவனங்களின் 30 சதவிகிதப் பணிகளை இந்திய பி.பி.ஓ.க்கள் செய்ய இருக்கின்றன. எனவே, நிதித்துறை யில் நுழைவதற்கு ஏற்றவகையில் தங்கள் படிப்பை மாணவர்களும் மாணவிகளும் அமைத்துக்கொள்வது பயன்தரும்.

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : ஸ்ரீநி




அருள்வாக்கு

# சர்வசக்தர்

நாம் எப்படி இருக்கிறோம்? எப்போதும் எல்லையில்லாத தேவைகளோடு (wants) இருக்கிறோம். பரமாத்மா ஒரு தேவையும் இல்லாமல் இருக்கிறார். இத்தனை தேவையுள்ள நாம் அற்ப சக்தியோடு இருக்கிறோம். ஒரு தேவையும் இல்லாத பரமாத்மாவோ சர்வசக்தராக இருக்கிறார். நாம் ஒரே பள்ளமாக இருக்கிறோம். அவர் பரம உன்னதமாக இருக்கிறார். அவர் சக்தியிலும் ஞானத்திலும் மட்டும் உயர்ந்தவர் என்பதில்லை. தயையிலும் உயர்ந்தவராக இருக்கிறார். அதனால்தான் அவரைத் தியானித்தால் பள்ளமாக இருக்கிற நம்மையும் தூர்த்து நிரப்பச் செய்கிறார். நாம் குறைந்தவர்கள், அவர் நிறைந்தவர். நம் குறையைத் தீர்த்து நிறைவாகச் செய்ய அந்த நிறைவால்தானே முடியும்? அப்படிச் செய்கிற கருணாமூர்த்தி அவர். நாம் உபாசித்தால் நம் குறைகளைப் போக்குகிறார்.

குறை இருக்கிறது என்றால் எதுவோ தேவைப்படுகிறது என்று அர்த்தம். அடியோடு தேவையே இல்லாவிட்டால் அப்படியே நிறைந்து விடலாம். நம் குறைகளை நிவிருத்தி செய்கிற பரமாத்மா கடைசியில் நமக்கு எதுவும் தேவையே இல்லை என்கிற நிறைவையும் தந்துவிடுவார். அப்போது அந்த உயர்ந்த மேடு நம்மைத் தூர்த்துத் தூர்த்து, பள்ளமாயிருந்த நாமும் அதோடு அதாகவே, சமமாக நிற்போம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

**மேஷம் - குழந்தைகளால் மகிழ்ச்சி!**

யோகமான வாரம்ங்க. உத்தியோகம், வீடு மாற்றம் நடக்கும். பணப் பிரச்னைகள் தீரும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும்ங்க. கல்வி வளம் மேலோங்கும். குழந்தைகளால் மகிழ்ச்சி ஏற்படும்ங்க. சனி / ராகு/ கேது/ குரு வழிபாடு செய்ய நலம் தரும்ங்க.

**ரிஷபம் - வியாபாரத்தில் அபிவிருத்தி!**

வெளிநாட்டிலிருந்து அழைப்பு வரும்ங்க. வியாபாரத்தில் நல்ல அபி விருத்தி உண்டாகும். திருமணத்தடை நீங்கி திருமணம் கை கூடும்ங்க. புண்ணிய ஸ்தலம் போவீங்க. உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும்ங்க. சனி வழிபாடு செய்ய பலன் கூடும்ங்க.

**மிதுனம்: கவனம்! கவனம்!**

இந்த வாரம் எதிலும் கவனமாக செயல் படறது நல்லதுங்க. வாகனத்துல போறப்ப, உடல் நிலையில, குடும்பத்தாருடன் பேச்சுல கவனமா இருங்க. படிப்புல அக்கறை எடுத்துப் படிங்க. ராகு / கேது / குரு வழிபட்டு வர தீமைகள் விலகி நற்பலன் கிட்டும்ங்க.

**கடகம் - வழக்கில் வெற்றி!**

திருமண அனுகூலம் கை கூடும்ங்க. வராத பணம் வரும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற் படும்ங்க. வீடு, மனை வாங்க சரியான நேரம். வழக்கில் வெற்றி கிடைக்கும். கடன் சுமை தீரும்ங்க. ராகு / கேது / சனி வழிபாடு செய்ய நற்பலன் உண்டு.

**சிம்மம் - சுபமான செலவுகள்**

மறைமுக எதிர்ப்புகள் நிறைந்து இருக் கும். யாருடனும் தர்க்கம் செய்வதை தவி ருங்க. கொடுக்கல், வாங்கலில் உஷார். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். மன சஞ்சலம் தீரும்ங்க. வெளிநாடு போக வாய்ப்பு ஏற்படும்ங்க. வேலை மாற்றம் ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போடாதீங்க. சனி / குரு வழிபாடு செய்ய பலன் கிட்டும்ங்க.

**கன்னி - மனக்குழப்பம் தீரும்!**

மகிழ்ச்சியான வாரம்ங்க. சுப நிகழ்ச்சி கை கூடும். குழந்தைகளால் மன சந் தோஷம் கிட்டும்ங்க. மகப்பேறு பாக்கியம் உண்டாகும். சொத்து சுகம் வந்து சேரும்ங்க. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும்ங்க. புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். மனக்குழப்பம் தீரும்ங்க. ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் சித்தமாகும்ங்க.

**துலாம் - பூமியால் ஆதாயம்!**

வீடு மாற்றம் உண்டாகும்ங்க. பூமி மூலம் ஆதாயம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும்ங்க. நீண்ட காலம் முடிவு பெறாத பிரச்னை தீரும்ங்க. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக் கும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பல னைத் தரும்ங்க.

**விருச்சிகம் - எண்ணியது நிறைவேறும்!**

புண்ணியஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும்ங்க. பண வரவு பெருகும். படிப்பில் நல்ல முன்னேற்றம் காணப் படும். வெளியூர் செல்லும் வாய்ப்பு வந்து சேரும்ங்க. மக்கள் செல்வம் உண்டாகும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு / சனி வழிபட நற்பலன் அளிக்கும்ங்க.

**தனுசு - வசந்த காலம் வந்தாச்சு!**

நீண்ட காலத்துக்குப் பிறகு வசந்தகாலம் வந்திருக்குங்க. எண்ணிய எண்ணம்

## நடக்குமென்பார்;

ஈடேறும். குடும்பத்தில் இருந்து வந்த மனக் கசப்பு விலகி சந்தோஷம் ஏற் படும்ங்க. வராத பணம் வந்து சேரும்ங்க. கொடுக்கல் வாங்கலில் இருந்து வந்த மனக்கசப்பு விலகும். கல்வி வளம் மேலோங்கும். ராகு / கேது வழிபாடு செய்துவர நலம் தரும்ங்க.

**மகரம் - வேலையில் உயர்வு!**

கடலில் தத்தளித்தவனுக்கு மரத்துண்டு கிடைத்தாற்போல தற்போது நல்ல காலம் துவங்கி இருக் குங்க. வியாபாரத்தில் இருந்த மந்தநிலை மாறும். செலவு கள் கட்டுக்கடங்கும். கணவன் - மனைவிக்குள் ஒற்றமை உண்டாகும்ங்க. பண வசதி பெருகும். சத்ரு தொல்லை விலகும்ங்க. ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண் டாகும்ங்க.




# நடக்கும்!

**25.01.09 முதல் 31.01.09 வரை**

**கும்பம் - வீண் பழி விலகும்!**

வீண் அலைச்சல்கள் குறையும். பணப் பெருக்கம் உண்டாகும்ங்க. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உற்றார், உறவினருடன் இருந்து வந்த தொல்லைகள் போகும். வீண் பிரச்னை, வீண் பழிகள் விலகும்ங்க. உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். சனி / குரு வழிபாடு செய்ய நற்பலன் பெருகும்ங்க.

**மீனம் - கடன் சுமை குறையும்!**

வெளியூர் பயணம் செல்ல வேண்டி இருக்கும்ங்க. பூர்வீகச் சொத்துகள் வந்து சேரும். விலகிப் போனவர்கள் விரும்பி வந்து சேர்வார்கள். கடன் சுமை குறை யும்ங்க. திருமணத் தடை விலகி திருமணம் நடக்கும். கோர்ட்டு, வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும்ங்க. ராகு / கேது வழிபட நற்பலன் கிட்டும்ங்க.

# 2

## பாரதிபாலன்

நேத்து ராத்திரி அவனை உள்ள வுட்டு கையும் களவுமா புடிச்சுட்டாங்களே...

**கோ**விந்து கண்களை மூடியிருந்தான். கண்களுக்குள் திருதிருவென்று புகை மூண்டெழுந்தது. ஒரே மூச்சுத் திணறல். கிறக்கமா, மயக்கமா? தியானம் முத்திய முகபாவத்தில் கிடந்தான். இரவுத் தூக்க மில்லை. பகல் தூக்கமும் முடியவில்லை. அந்த முகம்தான் வந்து மோதுகிறது; அந்தக் கண்கள்தான் நெஞ்சுக்குள் படபடக்கின்றன; வேப்பம் பூ உதிருவது மாதிரி நெஞ்சுக்குள் உதிர்ந்துகொண்டேதான் இருக்கிறது. அதுவும் இப்படித் தனிமையில் சிக்கிக் கொண்டால்? நேற்றைய நினைவுகளிலே வீழ்ந்து கிடந்தான்.

அவன் கண்களில் திரண்டிருந்த புகை, மெல்ல நாசிக்கு நகர்ந்தது. நறுமண மாயிற்று. சற்றுநேரம் அதிலே திளைத்தான். மெல்ல கண் பிரித்துப் பார்த்தான். புகை! வீடு முழுக்கப் புகை, சாம்பிராணிப் புகை! பால் பொங்கி வழிவது மாதிரி குபுக் கென்று பொங்கி நிறைந்துவிட்டது. வீட்டில் மட்டுமல்ல; அந்தத் தெரு முழு வதும் ஒழுகி, ஓடிற்று! வடக்கே தங்கப்ப நாடார் கடை; தெற்கே பழனி டெய்லர் கடை! எதிரே மாயாண்டித் தேவர் இந்தப் பக்கம் பாப்பம்மாக்கா வீடு. எல்லாமே அந்த வாசனையை அனுபவித்தன.

ஒருகணம் ஒன்றும் செய்யத் தோன்றாது! அது அப்பேர்ப்பட்ட வாசனை! இது சாம் பிராணிப் புகைதானா? இல்லை வேறு ஏதாவதுமா? எந்தக் கடையில் இப்படி விக்கிறான்? ஐயா, சாம்பிராணி போடுவதே அலாதி! தகதகவென்று எரிந்து தணல் தெறிக்கின்ற கங்குகளையே தேடுவார்;



பழுத்து தககதவென்று பொன்நிறத்தில் ஜொலிக்க வேண்டும்! போதாது என்று ஊதிஊதி அதற்கு உயிரூட்டுவார். பிற்பாடு தான் பொடி பண்ணிய சாம்பிராணி நிரந்து தூவுவார். குபீரென்று எழும்பி நிறையும்; அந்தத் தெருவுக்கே தெரிந்துவிடும் ஐயா வீட்டில் இன்னைக்கு விரதம்!

விரத பூஜை! அப்பா ஒரு பாடல் பாடு வார். பாடல் என்றால் ஒவ்வொரு விரதத் தின் போதும் பாடும் பாட்டு! குரல் எழும் பாது; ராகம் திரளாது; முகம் மட்டும் கனியும்; கண்ணும் கன்னத்துச் சதையும் அசலும்; காதைத் தீட்டினால் மட்டும் வார்த் தைகள் விழும்; நீர் விளாவி சூடம் பத்தி காட்டி, காக்கைக்குப் பரிமாறுவார். தழுகை இலையில் கவளம் கவளமாகச் சாதம் உருட்டி வைப்பார். மாட்டுக் காடிக்குப்



மாட்டார். ஒரு துண்டை மட்டும் சுருட்டி தலைக்கு வைத்துக் கொள் வார். காற்று திபுதிபுவென்று விழுந்து மோதும்; படுத்த மாத்திரத்தில் கண் சொருகி விடும். அம்மாவுக்குத் தூக்க மேது? முறம், சுலகு என்று சாணம் போடும்;

வாசலில் ஊர் நாட் டாமை வேலுப்பிள்ளை நின்றிருந்தார். அம்மா அவரை உள்ளே அழைத் தது. கோவிந்து எழுந்து நின்று கொண்டான். அப்பா ஒருக்களித்துப் படுத்துக்கிடந்தார். அவர் கையில், நெற்றி யில், மார்புக்கூட்டில் பூசியிருந்த திருநீறு உரிந்து விழுந்து கிடந்தது. ''கோவிந்து, எழுப்

# காற்று வரும் பருவம்!

பக்கமாக அதைக் கொண்டு வருவார். கா... கா... ஹா... கா, ஹா என்று கரைவார். சற்று நேரத்தில் காக்கைக் கூட்டம் கூடி விடும்!

அதன்பின்தான் சாப்பிட உட்கார வேண் டும்; அன்றுதான் வீட்டில் எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடுவது; சாப்பிட் டதும் ஐயா தலையைச் சாய்ப்பார். ரேழி தாண்டினதும் உள்ளே பட்டகச் சாலையில் தான் பகல் தூக்கம்! தூக்கம் என்றால் உடலைத் தளர்த்துவார். எதுவும் விரிக்க

புப்பா அவரை'' என்றது அம்மா. ''ஐயா'' என்றான். பதில் இல்லை. மீண்டும் குரல் கொடுத்தான். மெல்லத் தொட்டு அசைத் தான். சட்டென்று உலக்கி எழுந்தார். தலையை மட்டும் விசுக்கென்று உயர்த்தி னார். கடை வாயில் ஒடிய நீரை உள்ளங் கையால் அழுத்தித் துடைத்துக் கொண்டார்.

''என்னப்பா?''

''நாட்டாமைக்காரர் வந்திருக்கார்.''

''எங்கே..?''

''வாசல்ல...''

''உள்ளே வரச் சொல்லு.''

செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு வந்தார்.

''வாங்க...''

''வெரதமெல்லாம் ஆச்சா?''

''ஆச்சு. சித்த கண் அசந்தேன்.''

''அந்த ஜமுக்காளத்த விரிப்பா...''

கோவிந்து, ஜமுக்காளத்தை இரண்டாக மடித்துப் போட்டான். நாட்டாமைக்காரர் உட்கார்ந்தார்.

''பெரியவரைக் காணோம்.''

''வயலுக்குப் போயிருக்கான்.''

''எதுவும் தெகையலையா..?''

''சொல்றாகய்யா. ரெண்டு மூணு எடெத்துலெ. பூதிப்புரத்துலெ இருக்குன்னாக. அங்குட்டு மருத தாண்டிச் சொல்றாக. தூரம் தொலவட்டாவுலெ இருக்கு...''

''பூதிப்புரம்னா, அவளோட அக்காவ அங்கதேன் கொடுத்துருக்கு.''

''ம். எப்படியும் சித்திரை கழியணும்.''

''பாருங்க...''

அப்பா அதை முடித்தார். நாட்டாமைக் காரரைப் பார்த்து, ''என்ன திடுதிப்புனு?'' என்றார். நாட்டாமைக்காரர் அம்மாவைப் பார்த்துத் தயங்கினார். அம்மா அதைப் புரிந்துகொண்டு உள்ளே போய்விட்டது.

''டெய்லர் மாணிக்கம் ஒரு தொரட்டு பண்ணிப்பிட்டு வந்திருக்கான்.''

''எந்த டெய்லர்?''

''நம்ம சீனியாபிள்ளை மவன்!''

''என்னவாம்?''

''தண்ணி கட்டுக்காரன் கப்பையா இருக்கான்லெ, அவன் மவளோட...''

அப்பா தலையில் அடித்துக்கொண்டார்.

''ரொம்ப நாள் சங்கதியாம். பேச்சு வரத்தாவே இருந்திருக்கு...''

''ம்.''

''ஒண்ணுமுன்னா புழங்கிட்டான் போல...''

''அட அசிங்கமே.''

''அப்புறம். இந்தா அந்தானுருக்கான்.



இது அவுக ஆளுங்களுக்கெல்லாம் தெரிஞ்சுபோச்சு. நேத்து ராத்திரி அவனை உள்ள வுட்டு கையும் களவுமா புடிச்சுட்டாங்கே...''

''அப்புறம்!''

''என்னான்னு பதில் சொல்லிட்டுப் போங்கிறாங்கே.''

''உங்களுக்கு எப்படி..?''

''ரா முழுக்க அவிங்க சாவடியில புடுச்சு வைச்சிருக்காங்க. காலம்பற தாக்கல் வந்தது. நான் போய் நிக்கவும் விட்டுட்டாங்க. இப்ப இத விசாரிக்கக் கொடுங்கன்னு நிக்கிறாங்க. சீனியாபிள்ளை அழுவுறாரு. அதான் உங்களைக் கலக்கலாம்னு வந்தேன்.''

''டெய்லர் செஞ்சதும் தப்புதான்!''

**கோ**விந்து, வீட்டில் நிலைகொள்ள வில்லை. தன்னந்தனியாக ஆற்றுக்குப் போனான். எப்போதும் நாகு கூட வருவான். இல்லை சேகர். இன்று அவனாகவே போனான். பொழுது மோடமாகவே இருந்தது. மாந்தோப்பில் உலாத்தினான். மாவிலைகள் மடங்கி உதிர்ந்து கிடந்தன. மடங்கிய மடலுக்குள் ஒரு கூடு; அதற்குள்ளும் ஓர் உயிர். மதகிலிருந்து நீர் உருண்டு எழும் சப்தம்; வண்ணாத்தி துவைப்பது எங்கோ எதிரொலித்திற்று; அந்தத் தனிமை மெல்ல

மெல்ல அவனுள் இறங்கிற்று; நல்ல வேளை மனித முகங்களே காணோம்; பஞ்சு வின் நினைவும், நேற்றைய சந்திப்பும் அடி நெஞ்சில் ஊறிக் கிடந்தன; அதை ருசிக்க முடியவில்லை. நேற்று நடந்த ஊர்க் கூட்டம் நினைக்கநினைக்க நாக்கில் கசப்புத் தான் ஊறுகிறது! அந்தக் கசப்பு நாக்கைக் கடிக்கிறது.

''முடிவா என்ன சொல்றீக?''

**'சேவல்' படத்தின் எதிர்பாராத சறுக்கலில் அப்செட் ஆகியிருக்கும் பரத், அதிகம் நம்பியிருக்கும் படம் ஆறுமுகம். பாட்ஷா போன்ற பரபரப்பாகப் பேசப்பட்ட படங்களை இயக்கிய சுரேஷ் கிருஷ்ணாதான் ஆறுமுகம் படத்துக்கும் இயக்குநர் என்பதால் கோடம்பாக்க வட்டாரத்தில் இந்தப் படத்தை அனைவரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். சம்பளத்தை உயர்த்தலாமா? வேண்டாமா என்பதை ஆறுமுகம் படத்தின் ரிசல்ட் பொறுத்து முடிவு செய்யலாம் என்ற எண்ணத்தில் இருக்கிறாராம் பரத். சுரேஷ் கிருஷ்ணாவுக்கும் 'பாட்ஷா'வுக்குப் பிறகு பெயர் சொல்லும் ஒரு வெற்றி தேவைப்படுவதால் எல்லோருமே கடுமையாக உழைத்திருப்பதாகச் சொல்கின்றனர்.**

**- புத்தன்**

''மூக்காயியை டெய்லர் கட்டிக்கட்டும்.''

''ஆகுறதப் பேசுங்கப்பா.''

''ஏன் ஆகாதா?''

''எலே குடியானவுக தெருவுக்குள்ள வந்து அளந்து பேசுங்கடா...''

''குடியான ஆளுக செய்யுற அக்குறும்பு தெரியாதா...?''

''பொதுப்படையா பேசாதடா...'

''எவன்டா அவன்? மல்லுக் கட்ட ணும்னே வந்திருக்கியா...''

''தண்ணி கட்டுக்காரா நீ பேசய்யா.''

''என் பொண்ணுக்கு ஒரு ஞாயம் வேணும்!''

''ஞாயம்னா என்னப்பா?''

''பெரியவங்களுக்குத் தெரியாதா?''

''சேனியாபிள்ளை நீங்க என்ன சொல்றீங்க?''

''நான் என்னத்தச் சொல்ல? என்ன தெண்டம் போடுறீகளோ போடுங்க...''

''அதிகம் பேச வேண்டாம். அதோட நிறுத்துங்க.''

''தெண்டம் எதுக்கு?''

''பின்ன?''

''தாலி கட்டணும்'' ஒரே குரல்!

''எலெ நிக்குறவீங்க பேச வேண்டாம். ஒக்காந்திருக்க ஆளுக பேசட்டும்.''

''இப்படிச் சொல்லிச்சொல்லியே ஒக்கார வையுங்க.''

''ஆகுற காரியத்தப் பேசுங்கப்பா. தொரட்டுப் பண்ணணும்னே வந்தா என்ன செய்யுறது.''

''இது ஆகாத காரியமா?''

''பார்றா.''

தண்ணி கட்டுக்காரருடன் வந்த ஒருவர் விசுக்கென்று எழுந்தார். பக் கத்தில் இருந்தவர்கள் அவரைப் பிடித்து உட்கார வைத்தனர். அவர் விலகி வெளியேற முயன்றார். விட வில்லை. ஊர்ச் சாவடி நிறைந்துவிட்டது. அத்தனை தலைகளையும் தாண்டிப் போகவா முடியும்?

''சரி, பேசி முடிங்க. நேரம் ஆவுது.''

''பாருங்க. தண்ணிக்கட்டு சுப்பையா. ரொம்பக் கஷ்டப்படுறாப்புலெ. இனி அந்தப் பொண்ண ஒருத்தனுக்குப் பிடிச்சுக் கொடுக்கணும். காதும்காதும் வெச்ச மாதிரி செய்யணும். உண்டான செலவு தொகை யைத் தீர்த்துட்டாப் போதும்.''

''எவ்வளவு...?''

''நீங்க பாத்துச் சொல்லுங்க...''

''சுப்பையா எவ்வளவு ஆகும்?''

''பெரியவங்க பாத்து முடிவு பண் ணுங்க. என் பிள்ளை வாழ்வு அம்புட்டுத் தேன்.''

''அறுபதாயிரம் கட்டட்டும்'' என்று ஒரு குரல்.

''அறுவதா?''

''கட்டணும்.''

''நடக்குற காரியத்தைப் பேசுங்கடா...''

''ஏன் நடக்காதுங்குறேன்?''

''இப்படிப் பேசுனா என்னடா?''

''நெட்டையோ குட்டையோ, தெகச்சு வுடுங்க நாங் களும் வூடு போய் சேரணும்லெ...''

''டாக்டருக்கும் ரேஷன் கடைக்காரருக்கும் என்ன வித்தியாசம்?''

''டாக்டர், சர்க்கரை 'இருக்கு'ன்னு சொல்லுவார். ரேஷன் கடைக்காரர் இல்லைன்னு சொல்வார்!''

- ச.ஆ.கேசவன்

''நீ போகணும்முண்டா போ. உன் வூட்டுலெ ஆச் சுனா வுடுவியா!''

''பார்றா. என் மேலெ வுழுறெத.''

''நீங்க வாயை வெச்சுக் கிட்டு இருங்க சின்னயா.''

''சரி, நான் பேசலெடா. பெரிய மனுசன் நீ பேசு.''

''உங்க சண்டை இங்க வேண்டாம்'' என்று விரு மாண்டித் தேவர் துண்டை உதறினார்.

''முடிவா என்னடா சொல்றீங்க?''

''அறுபது.''

''புடுங்கிட்டுப் போவலாம்னு திட்டம் போட்டு வந்திருக்கான்.''

''அதெல்லாம் பேச வேண்டாம்.''

''போலீஸ் ஸ்டேஷன் போவலாமா?''

''ஏலெ. எவன்டா அவன்?''

''சீனியாபிள்ளை, நாப்பதக் கொடுத்து முடிங்க.''

''நல்ல கதை அறுபதுனா நாற்பதா?''

''பொறுங்கடா.''

''அம்புட்டெல்லாம் முடியாது.''

''பின்ன என்ன சொல்றீங்க.''

''எட்டோ, பத்தோ தான் புரட்ட முடியும்.''

''உன் மவன் ரோட்டுலெ நடக்கமுடியாது'' என்று ஓர் இளவட்டம் லுங்கியை உதறி எழுந்தது. கூடவே மற்றோர் உருவம். எதிர்த் திசையில் ஒரு வன். நாட்டாமைக்காரரும் எழுந்து விட்டார். கையை உதறி சமிக்ஞை காட்டி விட்டு செப்பலுக்குள் காலை நுழைத்தார். தண்ணி கட்டுக்காரர் நாட்டாமைக்காரரிடம் ஏதோ பேசினார். கையைத் தலைக்கு மேல் தூக்கி உதறிவிட்டுக் கிளம்பினார். தெரு முழுக்க அங்குமிங்குமாய் கூடிக்கூடி நின் றது. தெரு அமைதியாக இருந்தது. பூட்டிய வீட்டு வாசல்படியிலும் உட்கார்ந்து பேசி னர். ஒவ்வொரு தலையும் ஜோடி சேர்ந்து பேசிற்று. மணி இரண்டைத் தாண்டி விட் டது. அதிகாலையில் தெருக்குழாயில் தண் ணீர் பிடிக்க பாத்திரங்கள் போடப்பட் டிருந்தன. கோவிந்துக்குச் சலிப்பாக இருந் தது. நெஞ்சு கனத்தது. இருப்புக் கொள்ளாது துடித்திற்று. பேசாமல் வீட்டுக்குப் போய்ப் படுத்துக் கொள்ளலாமா? பெட்டிக் கடை ராவுத்தர் எல்லோரையும் திரட்டினார். சாவடிக்குள் விரட்டினார். ஏதோ தீர்மானம் ஆனது போல் எல்லோர் முகத்திலும் ஒரு வேகம் தெரிந்தது. மறுபடியும் எல்லோரும் சாவடியில் கூடினர்!

(காற்று வீசும்)

## நோ சான்ஸ்!

**க**டந்த சட்டமன்ற மற்றும் பாராளு மன்றத் தேர்தலின்போது, தனி தெலுங் கானா மாநிலம் கோரி தொடங்கப்பட்ட தெலுங்கானா ராஷ்டிரிய சமிதி கட்சியுடன் சாமர்த்தியமாகக் கூட்டணி அமைத்து ஆட்சி யைக் கைப்பற்றினார் ராஜசேகர ரெட்டி. ஆனால், 'தனி தெலுங்கானா' அமைக்க சாத்தியமில்லை என்று அவர் கைவிரித்து விட, தம் மத்திய மந்திரி பதவியையே ராஜினாமா செய்தார் தெலுங்கானா ராஷ்டிரிய சமிதி கட்சியின் தலைவர் சந்திர சேகர ராவ். இந்நிலையில் மறுபடியும் தேர்தல் வருகிறது. தெலுங்கானா பகுதியைச் சேர்ந்த காங்கிரஸ் எம்.பி.க்கள் மற்றும் எம்.எல். ஏ.க்களுக்கு வயிற்றில் புளியைக் கரைக் கிறது. எனவே, காங்கிரஸ் மேலிடத்தில், 'தெலுங்கானா மாநிலத்தை அமைக்க உரிய நடவடிக்கை எடுக்கப்படும் என்று தேர்தலுக்கு முன்னதாக ஓர் அறிவிப் பைச் செய்துவிடுங்கள். இல்லை யெனில் எங்கள் பாடுதான் திண்டாட் டம்' என்று கெஞ்சிக் கூத்தாடியும், 'தெலுங்கானாவா? நோ சான்ஸ்' என்று கைவிரித்துவிட்டது காங்கிரஸ் மேலி டம்.

*(அதுதானே காங்கிரஸ் கல்ச்சர்!)*

## கம்யூனிஸ்ட் கணக்கு!

*"லஞ்ச ஊழலில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சியை வீழ்த்தியே தீருவேன்" என்று சபதம் போட்ட கையோடு, பெருங்கூட்டணி ஒன்றை அமைத்து, காங்கிரஸை வீழ்த்த வியூகமும் வகுத்துவிட்டார் தெலுங்குதேசம் கட்சித் தலைவர் சந்திரபாபு நாயுடு. இப்போது தமது கூட்டணியில் சி.பி.ஐ., சி.பி.எம். தவிர தெலுங் கானா ராஷ்டிரிய சமிதி கட்சியையும் வளைத்*

* விஜயசாந்தி

எம்.பி. ஆகிறார்


* சந்திர சேகர ராவ்

துப் போட்டுவிட்டார். மூன்றாவது அணி வேறு எங்கே வெற்றி பெறுகிறதோ இல்லையோ, ஆந்திராவில், நாயுடு புண்ணியத்தில் தலை நிமிரும் என்று கணக்குப் போடுகிறார்கள் கம்யூனிஸ்ட்கள்.

*(கணக்கு தப்பா? ரைட்டா? பார்த்திடுவோம் தேர்தலில்!)*



✱ ராஜசேகர ரெட்டி



✱ சந்திரபாபு நாயுடு



✱ ராமலிங்க ராஜு

## வித்தியாச சாந்தி!

அதிரடி ஆக்ஷன் ராணியான விஜயசாந்தி தீவிரமான தெலுங்கானா ஆதரவாளர். பா.ஜ.க.விலிருந்து விலகியதும், 'தல்லி தெலுங்கானா' என்ற பெயரில் தனிக்கட்சி துவக்கினார். போணியாகவில்லை. டி.ஆர்.எஸ்.கட்சியின் சந்திரசேகர ராவ், தந்திரமாக, விஜயசாந்தியுடன் பேசி, அவரது கட்சியை, தமது கட்சியுடன் இணைக்கும்படிச் செய்துவிட்டார். வரும் தேர்தலில் டி.ஆர்.எஸ். கட்சிக்கும், அது

# விஜயசாந்தி?

அடங்கிய மூன்றாவது அணிக்கும் அனல் பறக்க பிரசாரம் செய்யப் போகிறார் விஜயசாந்தி. தவிர அவருக்கு எம்.பி. தேர்தலில் சீட் நிச்சயமாம்.

*(லோக் சபாவுக்குப் போய் அங்கே ஃபிலிம் காட்ட மாட்டீங்களே மேடம்?)*

## ஸ்டார் கைதி!

*சஞ்சல்குடா சிறைச்சாலைக்குத் திடீரென ஸ்டார் அந்தஸ்து வந்துவிட்டது. அங்கேதான், 'ஆந்திராவின் பில்கேட்ஸ்' என்று புகழப்பட்ட 'சத்யம் கம்ப்யூட்டர்ஸ்' ராமலிங்க ராஜு அடைக்கப்பட்டிருக்கிறார். சிறையில் அடைக்கப்பட்ட அன்று இரவு ராஜு சாப்பிட மறுத்தபோது, அருகில் இருந்த பிளாக்கிலிருந்து ஒரு நண்பர் வந்து அவருடன் பேசி, சாப்பிட வைத்தாராம். அந்த நண்பர், டெபாசிட்தாரர்களை ஏமாற்றிய குற்றத்துக்காகக் கைதாகி, சிறையில் இருக்கும் ஒரு வங்கியின் சேர்மனாம்!*

*(மூழ்காத ஷிப்பே ஃப்ரெண்ட்ஷிப் தான்!)*

## மக்களோடு கூட்டணி!

ஆந்திராவின் விஜயகாந்த் என்று மீடியாக்காரர்கள் நடிகர் சிரஞ்சீவியைக் குறிப்பிடுகிறார்கள். காரணம், மற்ற கட்சிகள் அனைத்தும் கூட்டணி அமைத்து, தேர்தலைச் சந்திப்பதில் மும்முரமாக இருக்க, சிரஞ்சீவி மட்டும், 'எந்தக் கட்சியுடனும் கூட்டணி இல்லை; தனியாகவே போட்டியிடுவதற்குத் தயார்!' என அறிவித்திருக்கிறார். அது மட்டுமில்லை; அடிக்கடி, 'என் கூட்டணி மக்களோடுதான்' என்று பேசி கிலி ஏற்படுத்துகிறார்!

*(நெனைப்புதான் பொழைப்பைக் கெடுக்குது!)*

– கௌதம்ராம்

19

ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம்

# துணை வரும் தயாபரி!

தாம்பூல பூரித முகீ என்பதற்கு அடுத்து வரும் திருநாமம் தாடிமீ குஸும பிரபா - மாதுளம் பூவின் வர்ணத்தையும் பொலிவையும் போன்ற அழகு நிறைந்தவள் என்று இதற்குப் பொருள். மாதுளம்பூ, அம்பாளுடைய பூஜைக்கு மிகவும் உகந்ததும் கூட. அபிராமி பட்டர் அவளை 'மாதுளம் போது' என்றே வர்ணிக்கிறார்!

பக்த நிதி என்பது மற்றும் ஓர் அழகான, அர்த்தமுள்ள திருநாமம். பக்தர்களுக்குப் பெரும் செல்வமாக - நிதியாக விளங்கக்கூடியவள் அம்பிகை பரமேசுவரி. தியாகபிரம்மம் கேட்டாரே - ''நிதி சால சுகமா?'' என்று... ''வேறென்ன நிதி வேண்டும் எனக்கு? ராமா! உன்னுடைய சன்னிதி ஸேவையின் சுகமே போதும். பணம் வேண்டாம்'' என்று பாடினாரே! அது போல் அம்பாளின் சன்னிதியே பக்தர்களுக்கு நிதி.

### நிர்ணயிப்பவள்

நியந்த்ரி - நியந்த்ரி என்றால் வழிகாட்டக்கூடியவள். நம் வாழ்க்கையில், எந்த வழியில் நாம் போக வேண்டும் என்று வழிகாட்டக்கூடியவள் அம்பாள். பகவான் வழிகாட்டியாக இருக்கிறார் என்பது தான் உண்மை. இது அம்பாள் ஸ்வரூபத்துக்கு உரிய அம்சம் மட்டுமல்ல. எந்த தெய்வத் திருமேனியை வணங்கினாலும் எந்த ஸ்வரூபத்தை வணங்கினாலும் இந்தப் பொருத்தத்தைப் பார்க்கலாம்.

உபநிஷத் என்ன சொல்கிறது? வாழ்க்கை ஒரு தேர் என்று சொல்கிறது. தேரை ஓட்டுபவர் யார்? என்று கேட்டால், ஸாரதியாக கையில் கோலை வைத்துக் கொண்டு குதிரையை ஓட்டுகிற மாதிரி - கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்குச் செலுத்தினாரே - அந்த மாதிரி பகவான்தான் ஓட்டுகிறான்.

அர்ஜுனன், ''எனக்கு வேறொன்றும் வேண்டாம் கிருஷ்ணா! நீ ஆயுதம் தரிக்காவிட்டாலும் பரவாயில்லை...'' என்று கிருஷ்ணனைத் தங்கள் பக்கம் இருக்கும்படி கேட்டுக்கொண்டான்.

''கையில் ஆயுதம் எடுக்க மாட்டேன்'' என்பது கிருஷ்ணனின் நிபந்தனை. அர்ஜுனன் அதை ஏற்றுக்கொண்டான். ஆனால் துரியோதனன் நினைத்தான்: 'இந்த ஒரே ஒற்றை ஆள், ஒரே ஒரு கிருஷ்ணன் - அவனும் கையிலே ஆயுதம் எடுக்க மாட்டானாம் - அவனை வைத்துக்கொண்டு என்ன செய்வது?' என்று யோசித்தான்!

''இந்த ஒரே ஒரு கிருஷ்ணனுக்குப் பதிலாக கோடி கோடி கோபாலர்கள் வந்தால் பரவாயில்லை. ஒற்றைக் கிருஷ்ணன் எனக்கு வேண்டாம்'' என்று சொல்லி

சுதா சேஷய்யன்

விட்டுப் போய்விட்டான் துரியோதனன்!

அதே ஒற்றைக் கிருஷ்ணனிடம், ''எனக்குச் சின்னதாக ஓர் உதவி பண்ணேன்...'' என்று கேட்டுக்கொண்டான் அர்ஜுனன். ''என்னுடைய தேருக்குச் சாரதியாக வா'' என்று கேட்டுக்கொண்டான். அவனேதான் விரும்பிக் கேட்டான்.

## கீதையும் பாதையும்

அர்ஜுனன் அங்கே நம் அனைவரது பிரதிநிதியாகக் கேட்கிறான். அர்ஜுனனுக்கு பகவான் கீதையை உபதேசம் செய்தார் என்றால், ஏதோ அவன் ஒருவனுக்கு மட்டும் செய்த உபதேசம் அல்ல அது! அர்ஜுனனை மாதிரியே சலனங்களுக்கும் சஞ்சலங்களுக்கும் நடுவே இருக்கக்கூடிய இந்த ஜீவிதர்களுக்குச் சொல்வதற்காக வந்த கீதோபதேசம் அது.

அப்படியானால், அர்ஜுனன் ஒரு பிரதிநிதி. அவன் பகவான் கிருஷ்ணனிடம் சாரதியாக வரும்படி கேட்டதற்கு என்ன அர்த்தம்? குருக்ஷேத்திரப் போரில் அந்தப் பதினெட்டு நாட்களுக்கு மட்டும் தேரோட்ட வேண்டும் என்பதா அர்த்தம்? குருக்ஷேத்திரப் போர் எங்கே நடந்தது என்பதைவிட, அது எல்லார் மனங்களிலும் இன்றைக்கும் தொடர்ந்து நடக்கிறது என்பதே முக்கியம் - எல்லா இடங்களிலும் எல்லா மனங்களிலும் எப்போதும் தொடர்ந்து நடந்துகொண்டேயிருக்கிறது! ஒவ்வொரு நாளும் நம் மனசுக்குள்ளே, 'இப்படிப் பண்ணுகிறோமே - இது சரியா?' என்று ஒரு கேள்வி எழாமல் இருக்காது. தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையேயான அந்தப் போராட்டம் நம் உள்ளே நடந்துகொண்டேதான் இருக்கும். ஆகவே, வாழ்க்கைத் தேரை ஓட்டுவதற்கு, அர்ஜுனன் கேட்ட மாதிரி, ''கிருஷ்ணா, நீ வந்து தேரை ஓட்டு!'' என்று நாம் கேட்டால், அவன் வந்து ஓட்டுகிறபோது அந்தத் தேர் சரியான பாதையில் போகும்.

அப்படித் தேரோட்டியாக கிருஷ்ணர் வந்தார். அதே மாதிரிதான் குதிரைப் பாகனாக, மாணிக்கவாசகர் வாழ்க்கையில் சிவபெருமான் வந்தார். அம்பாள், சக்ரராஜ ரதத்தில் வருகிறாள் என்றால், இந்த வாழ்க்கையைச் சரியான பாதையில் செலுத்துவதற்காக வருகிறாள். அவளே நியந்த்ரியாக வழிகாட்டுபவள்.

> **இருட்டா பிரகாசமா என்று தெரியாமல், எந்தப் பக்கம் திரும்புவது என்று தெரியாமல் விழிக்கும்போது, துணையாக நின்று வழிகாட்டக்கூடிய நியந்த்ரி அம்பாள்தான்.**

## துணையாக வருபவள்

வழிகாட்டி வழிநடத்துவதால்தான் தெய்வத்துக்குத் தோன்றாத் துணை என்று பெயர். 'துணை' என்ற வார்த்தைக்கு, நம்மைவிட உயர்ந்தது/உயர்ந்தவர் என்று அர்த்தம். நம்மைவிடத் தாழ்ந்தது என்று அர்த்தம் அல்ல! ஆனால், துரதிர்ஷ்டவசமாக இன்று அந்த வார்த்தைக்கு அப்படி பொருள் மாறிவிட்டது! வைஸ் பிரின்ஸிபல் என்பதை, துணை முதல்வர் என்று குறிப்பிடுகிறோம். வைஸ் பிரெஸிடென்ட் துணை ஜனாதிபதி! ஆனால் 'அம்பாள் துணை' என்றோ 'முருகன் துணை' என்றோ எழுதுகிறபோது, அம்பாளும் முருகனும் நம்மைவிட ஒரு படி கீழே என்றா அர்த்தம்!

துணையாக யார் நம்முடன் வரமுடியும்? நாம் புறப்பட்டுப் போகிறபோது, வழி

தெரியவில்லை...! வழி தெரிந்த ஒருவர் நம் கூட வந்து வழிகாட்டுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது வழிகாட்டுகிறவர் உயர்ந்தவரா? வழியே தெரியாதவர் உயர்ந்தவரா? எனக்குத் தெரியாத விஷயம் இன்னொருத்தருக்குத் தெரிகிறதனாலேதானே அவரைத் துணைக்கு அழைக்கிறேன்! அப்படியானால் அவர்தானே உயர்ந்தவர்!

அப்படி நாம் இருட்டா பிரகாசமா என்று தெரியாமல், எந்தப் பக்கம் திரும்புவது என்று தெரியாமல் விழிக்கும் போது, துணையாக நின்று வழிகாட்டக்கூடிய நியந்த்ரி அம்பாள்தான். தோன்றாத் துணை! தோன்றாத் துணை என்பது கண்ணுக்குத் தெரியாது. ஆனால் எப்போதுமே துணையாக இருக்கும்.

## நான்கு குணங்கள்

**நிகிலேசுவரி** - இந்த உலகத்துக்கு - நிகிலத்துக்கு, அகிலத்துக்கு ஈசுவரியாக இருக்கக்கூடியவள்.

**மைத்ர்யாதி வாசனா லப்யா**- மைத்ரி என்று ஒரு திருநாமம் அம்பாளுக்கு. **மித்ர ரூபிணி** என்பதுடன் தொடர்பு படுத்த வேண்டிய திருநாமம். அம்பாள், நான்கு விதமானவர்களுக்கு நான்கு விதமாக அருள் செய்கிறாள். ஜீவர்களை நான்கு விதமாகப் பிரிக்கலாம். எப்படி? சில பேர் எப்போதும் துக்கத்திலேயே இருப்பார்கள். அவர்களுக்குத் துன்பத்துக்கான காரணம் ஏதேனும் இருக்கலாம். அப்படிப் பட்டவர்களுக்கு அம்பாள் கருணாவாக இருக்கிறாள். கருணை காட்டுகிறாள்.

சரி, சில பேர் வாழ்க்கையில் எல்லாம் கிடைக்கப்பெற்று மகிழ்ச்சியில் இருக்கிறார்கள். இத்தகையவர்களுக்கு, சந்தோஷத்தைத் தரக்கூடிய முதிதாவாக அம்பிகை இருக்கிறாள். இன்னும் சில பேருக்கு, என்ன செய்வதென்று புரியாமல் - உபாயம் அறியாத கலக்கத்தில் இருப்பவர்களுக்கு, உபேக்ஷாவாக இருக்கிறாள். உபாயத்தைத் தருகிறாள்.

- இவை மூன்று நிலைகள். இந்த மூன்று நிலைகளிலுமே அல்லாது, பிரச்னைகள் எதுவுமின்றி சுகத்திலேயே இருப்பவர்களுக்கு மைத்ரியாக இருக்கிறாள். மைத்ரி என்பவள் தோழமையுடன் பழகும் தன்மையுடையவள்.

இப்படி கருணாவாக, முதிதாவாக, உபேக்ஷாவாக, மைத்ரியாக தனது வாசனைகளை (இயல்புகளை) பக்தர்களிடத்தில் வெளிப்படுத்துகிறாள் அம்பிகை.

(வளரும்)

ஸ்லம்டாக் மில்லியனர் படத்தில்...

# மியூஸிக் மில்லியனர்!

**அல்லா ரக்கா ரஹ்மான் என்ற முழுப்பெயர் கொண்ட ஏ.ஆர்.ரஹ்மான் 'ஸ்லம்டாக் மில்லியனர்' படத்துக்கு அமைத்த இசைக்காக கோல்டன் க்ளோப் விருதைத் தட்டி வந்திருக்கிறார். சந்தோஷ மூடில் இருந்தவரைச் சந்தித்தோம்...**

**ஸ்லம்டாக் மில்லியனர் படத்துக்கு இசையமைத்த அனுபவம் எந்த விதத்தில் வித்தியாசமாக இருந்தது?**

''இது இந்திய சினிமாவுக்கு இசையமைப்பதிலிருந்து முற்றிலுமாக மாறுபட்ட அனுபவம். ஹாலிவுட்டில் பின்னணி இசையைப் படத்தின் கேரக்டராகப் பார்க்கிறார்கள். அதை நான் ஆண்ட்ரு லாயிட் வெப்பருடன் பணியாற்றியபோது புரிந்துகொண்டேன். அது முதல், அவர்களின் இசைத் தேவை என்ன? அவர்களின்

திரை இசை ரசனை எப்படிப்பட்டது? என்று எனக்கு விளங்க ஆரம்பித்தது. அவர்களுக்கு இசை அமைப்பது என்பது சவால் நிறைந்தது. அதைச் செய்து காட்டி, அதற்காக அங்கீகரிக்கப்பட்டிருக்கும்போது மகிழ்ச்சியாக இருக்கிறது.''

***ரோஜா ரஹ்மான்... டு க்ளோபல் ரஹ்மான்...?***

''ஒரு முழு வட்டம் சுற்றி முடி வடைந்திருப்பதாக நினைக்கிறேன். பல் வேறுவிதமான புது முயற்சிகள்; பல்வேறு தரப்பிலிருந்தும் பாராட்டுக்கள்; ஆனாலும் எல்லாப் புகழும் இறைவனுக்கே!''

***உங்கள் கிரியேடிவிடியின் சீக்ரெட்..?***

''அடிப்படையில், எனக்கு எந்த ஒரு விஷயமும் சீக்கிரத்தில் போர் அடித்து விடும். அடுத்து என்ன புதுமை செய்ய லாம்? என்று இடைவிடாமல் மூளையைக் கசக்கிக் கொண்டேயிருப்பேன். ஒரு புது ஐடியா தோன்றினால், அதை அப்படியே கொடுக்காமல், என்ன பண்ணினால் அது



**“ஹாலிவுட்டில், பின்னணி இசையைப் படத்தின் கேரக்டராகப் பார்க்கிறார்கள்!”**

இன்னும் மெருகேறும் என்று யோசிப்பேன். இந்த இடைவிடாத தேடல்தான் என் கிரியேடிவிடிக்கு அஸ்திவாரம்.''

***ரீமிக்ஸ் பாடல்களை வரவேற்கிறீர்களா?***

''வழக்கமான டியூனில் இல்லாமல் வந்தே மாதரத்தைப் புதுசாகக் கொடுத்த போது, அது குழந்தைகள் முதல் யங் ஜெனரேஷன் வரை அனைவரையும் கவர்ந்தது. திரைப்படங்களில், கதைக்கு, காட்சிக்கு அவசியம் என்கிறபோது, பழைய பாடல்களை ரீமிக்ஸ் செய்வது சரி. அதனால், சில நல்ல பாடல்களைக் கேட்க வாய்ப்பில்லாத இந்தத் தலைமுறையினருக்கு, புது டியூனில் அவற்றைக் கேட்டு ரசிக்க சான்ஸ் கிடைக்கும். ஆனால், பாட்டை ஹிட் ஆக்க குறுக்கு வழி என்று செய்ய ஆரம்பித்தால் அது தவறு.''

***எந்த அடிப்படையில் ஒரு படத்துக்கு இசையமைக்க ஒப்புக் கொள்கிறீர்கள்? அல்லது மறுக்கிறீர்கள்?***

''படத்தில் சம்பந்தப்பட்ட ஒட்டு மொத்த டீமைத்தான் நான் முக்கியமாகப் பார்க்கிறேன். நல்ல டைரக்டராக இருப்பார்; அல்லது தயாரிப்பாளர் தெரிந்தவராக இருப்பார்; அதற்காக ஒப்புக்கொண்டு, படங்கள் பாதியில் நின்று போயிருக்கின்றன. எனவே, மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறேன். என் கையில் இருக்கும் கமிட்மென்ட்ஸ் என்ன என்பதையும் பார்த்துத்தான் ஒப்புக்கொள்கிறேன்.''

***உங்களிடம் இசையை வாங்குவதற்கு நிறைய காலம் காத்திருக்க வேண்டியிருக்கிறதே? உங்களுக்கு இதனால் குற்றவுணர்வாக இல்லையா?***

''நிச்சயமாக இல்லை. என்னை அணுகுகிறவர்களிடம் முதலிலேயே, என்னால் அவர்களுடைய படங்களுக்கு எப்போது டியூன் போட்டுத் தர முடியும், பின்னணி இசை சேர்த்துத் தர முடியும் என்று தெளிவாகச் சொல்லிவிடுகிறேன். அதற்குத் தயாரானவர்கள் மட்டும்தான் காத்திருக்கிறார்கள். அது முடியாதவர்கள், வேறு இசையமைப்பாளர்களை நாடிப் போய்விடுகிறார்கள். எனவே, நான் யாரையும் அவசியமில்லாமல் காத்திருக்க வைப்பதில்லை.''


* நேரில் வாழ்த்தும் இசையமைப்பாளர் ஸ்ரீகாந்த் தேவா

***இன்று ஏராளமான புதுப் பாடகர்கள் அறிமுகமாகிறார்கள். ஆனால், சீக்கிரமே காணாமல் போய் விடுகிறார்களே?***

''முன்பெல்லாம் சினிமாவில் பாடுவது என்பது ஒரு கோட்டை போல இருந்தது. அந்தக் கோட்டையின் கதவுகள் எளிதில் புதியவர்களுக்காகத் திறக்காது. இன்று அந்த நிலைமை மாறி, புதியவர்களுக்கு நிறைய வாய்ப்புகள் கிடைக்கின்றன. அது வரவேற்கப்படவேண்டிய ஒரு மாற்றமில்லையா? அதே சமயம், புதியவர்கள் நிலைத்து நிற்காமல் போவதற்கும், மிக அதிக அளவில் புதியவர்கள் வருவதுதான் காரணம்.''

***ரஹ்மான் இசையில் நிறைய தமிழ்ப் பாடல்கள் கேட்க ஆசையாக இருக்கிறதே?***

''நான் உலகின் எந்த மூலையில் இருப்பவர்களுக்காக இசை உருவாக்கினாலும், அதை இங்கே இருந்துதான் செய்துகொண்டிருக்கிறேன். நீண்ட அயல் நாட்டுப் பயணங்களைக் குறைத்துக் கொண்டுவிட்டேன். என் ஜீவன் இங்கேதான் இருக்கும்; எங்கேயும் விலகிப் போய் விடாது.''

***மறக்க முடியாத பாராட்டு?***

''குறிப்பிட்டு எதைச் சொல்வதென்று தெரியவில்லை. இந்தக் கேள்விக்குப் பதிலாக மேடையில் வழங்கப்படும் விருதுகள், பாராட்டுகள் என்று குறிப்பிடுவதைவிட, 'உங்கள் பாட்டைக் கேட்டுவிட்டு தற்கொலை எண்ணத்தைக் கைவிட்டேன்', 'என் வாழ்க்கையில் நல்ல மாற்றங்களை ஏற்படுத்தியது' என்பது போன்ற வாழ்த்துகள் கடிதங்கள் மூலமாகவும், ஃபோன் மூலமாகவும் பல முகம் தெரியாத என் ரசிகர்களின் அன்புதான் இந்த நேரத்தில் என் நினைவுக்கு வருகின்றது.''



**"திரைப்படங்களில் காட்சிக்கும், கதைக்கும் தேவையெனில் பழைய பாடல்களை ரீ-மிக்ஸ் செய்வதில் தவறில்லை!"**

***ரஹ்மானுக்கு மகிழ்ச்சி தருவது?***

''இசை... இசை... இசையைத் தவிர வேறொன்றுமில்லை.''

***வாட் நெக்ஸ்ட்?***

''எனக்குப் பிடித்தது என்று சில விஷயங்கள் செய்ய விரும்புகிறேன். திருக்குறளுக்கு இசை வடிவம் கொடுக்க விரும்புகிறேன். குணங்குடி மஸ்தான் சாஹிப் பாடல்களுக்கு இசையமைக்க ஆசை. அப்புறம் இன்னொரு பெரிய திட்டம் இருக்கிறது. ஆனால் அதைப் பற்றி இப்போது சொல்வதைவிட, சரியான நேரத்தில் சொல்ல விரும்புகிறேன்.''

- **எஸ்.சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**

# அன்றும் இன்றும் என்றும்...

**1. வ**ஜ்ஜி நாட்டு மக்கள் ஒற்றுமையுடன் கூட்டம் கூடி தேசத்துக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்து வருகிறார்களா?

2. சட்டம் இயற்றாமல் தங்களுடைய மனம்போனபோக்கில் நடந்துகொள்ளும் வழக்கத்தை அனுஷ்டிக்காமல் இருக்கிறார்களா?

3. தங்களுக்குத் தாங்களே இயற்றிக் கொண்டுள்ள சட்டங்களுக்குக் கீழ்ப் படிந்து அவற்றை ஏகோபித்த முறையில் நிறைவேற்றி வருகிறார்களா?

4. நாட்டின் தலைவர்களை வணங்கி அவர்களுக்கு மரியாதை காட்டுகிறார்களா? அவர்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறார்களா?

5. வஜ்ஜி ஜனங்கள், தங்களுடைய பெண்மணிகளிடம் கொடுமையாக நடந்து கொள்ளாமல் இருக்கிறார்களா?

6. ஜாதிமத வேற்றுமை எதுவுமின்றி எல்லா மக்களையும் சமத்துவமாக நடத்துகிறார்களா?

7. கவிகளுக்கும் கலைகளுக்கும் கோயில்களுக்கும் மதங்களுக்கும் பாதுகாப்பு அளித்து வருகிறார்களா?

சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால், புத்தபிரான் அஜாத சத்துரு மன்னனைப் பார்த்து மேற்கண்ட ஏழு கேள்விகளைக் கேட்டதாக சரித்திரம் கூறுகிறது.

வடக்கு பீகார் மாகாணம் வஜ்ஜி நாடு என்று அக்காலத்தில் வழங்கப்பட்டு வந்தது. அப்போது அந்த நாட்டில் குடியரசு முறையே அனுஷ்டிக்கப்பட்டு வந்ததாகக் கூறப்படுகிறது.

தெற்கு பீகார் அஜாத சத்துரு மன்னனுடைய ஆட்சியின் கீழ் இருந்து வந்தது. அஜாத சத்துரு வடக்கு பீகார் மீது படையெடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தான்.

தன்னுடைய தலைநகருக்கு அருகாமையில் குன்றில் தவம் புரிந்து கொண்டிருந்த புத்தர்பிரானை அவ்விஷயமாக அபிப்பிராயம் கேட்டான்.



அந்தச் சமயத்திலேதான் புத்த முனிவர் அஜாத சத்துருவைப் பார்த்து அவ்வாறு ஏழு கேள்விகளைக் கேட்டார்.



வஜ்ஜி நாட்டு மக்கள் தங்களைத் தாங்களே சிறப்பாக ஆட்சி புரிந்து வந்ததால், அந்தக் கேள்விகளுக்கெல்லாம் ''ஆம்'' என்று கூறுவதைத் தவிர அஜாத சத்துருவுக்கு வேறுவழி இல்லாமல் போயிற்று.

''அவ்விதம் சிறப்பாக ஆட்சி புரிந்து வரும் ஜனங்கள் மேன்மேலும் வெற்றி பெற்று அபிவிருத்தியும் க்ஷேமமும் அடைவார்களேயன்றித் தோல்வியடைய மாட்டார்கள். ஆகையால், அவர்கள் மீது படையெடுக்கும் உத்தேசத்தைக் கைவிட்டுவிடு'' என்று புத்த மகான் புத்திமதி கூறினார்.

அந்த மாமுனிவரின் உபதேசத்தைச் சிரமேற்கொண்டு அஜாத சத்துரு யுத்த நோக்கத்தைக் கைவிட்டான்.

அந்த மகாபுருஷரின் -பொன்மொழிகள் முக்காலத்துக்கும் மூவுலகத்துக்கும் பொருத்தமான அரசியல் தத்துவ விளக்கம் அல்லவா?

இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன் புத்தர்பிரான் கேட்ட அதே கேள்விகளுக்கு ''ஆம்'' என்று பதில் அளிக்கக்கூடிய நிலையில் இருக்கும் வரையில், பாரதநாடு மேன்மேலும் புகழும் வெற்றியும் பெற்றுச் சுதந்திரத்துடனும் சுபிட்சத்துடனும் விளங்கி வரும் என்பதில் ஐயம் இல்லை.

**பா**ரத தேசம் பெறுதற்கரிய பூரண சுதந்திரக் குடியரசு உரிமையைப் படாதபாடுபட்டுப் பெற்றிருக்கிறது.

குடியரசு ஜனன விழாவை மகா ஜனங்கள் வெகு குதூகலத்துடனும் மனமகிழ்ச்சியுடனும் மகோற்சவமாகக் கொண்டாடினார்கள்.

புதிய குடியரசுத் திட்டத்தின்படி சுமார் பதினாறு கோடி ஜனங்களுக்கு மேல் வோட்டுரிமை பெறுவார்கள்.

ஜனாதிபதியையும் மந்திரிகளையும் பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுக்கும் அதிகாரம் அந்தப் பதினாறு கோடி மக்களுக்கும் அளிக்கப்பட்டிருக்கிறது.

# வாழ்க குடியாட்சி!

சர்க்கார் தங்களுடைய அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யாமல் இருக்க வேண்டியது எவ்வளவு அவசியமோ, அதைக் காட்டிலும் வாக்காளர்கள் தங்களுடைய வாக்குரிமையை-அதிகாரத்தை-துஷ்பிரயோகம் செய்யாமல் இருக்கவேண்டியது அவசியமாகும்.

எதிர்காலத்தில் இந்தியக் குடியரசு சிறப்புற்று, ஓங்கி, உலகநாடுகளிடையே உன்னதமான ஸ்தானத்தை வகிக்குமாயின், அந்தப் பெருமையில் பாரத நாட்டு மக்கள் ஒவ்வொருக்கும் பங்கு உண்டு.



✱ டாக்டர் ராஜேந்திர பிரசாத்

அதுபோலவே, குடியரசு சிறப்புடன் விளங்குவதற்கான கடமைகளையும் காரியங்களையும் செய்யவேண்டிய பொறுப்பும் ஒவ்வொருவரையும் சார்ந்திருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

குடியரசை அடையும் பாக்கியம் வாய்க்கப் பெற்றுள்ள பாரத நாட்டு மக்கள், அந்தக் குடியரசின் முதலாவது தலைவராக, ஜனாதிபதியாக பாபு ராஜேந்திரப் பிரசாதைப் பெற்றதன் மூலம் இன்னும் அதிக பாக்கியசாலிகள் ஆகியிருக்கிறார்கள்.

அஜாத சத்துரு மன்னனுக்கு மேலே குறிப்பிட்டவாறு ஹிதோபதேசம் செய்த புத்த மகான் எங்கு அவதரித்தாரோ, அதே பிரதேசத்தில் ஜனித்த பாபு ராஜேந்திரரும் அந்த முனிவரைப் போலவே களங்கமற்ற சீரிய வாழ்க்கையை நடத்தி வருகிறார்.

- கல்கி 25.1.1950

# பாசுரங்களை ரசிக்கும் கலைஞர்!

2007-ஆம் ஆண்டு வெளியான சிறந்த தமிழ்ப் புத்தகங்களுக்கும் அதை வெளியிட்ட பதிப்பகங்களுக்கும் அண்மையில் பரிசு வழங்கினார் முதல்வர் கருணாநிதி. பதிப்பகத்தார் சார்பில் தென்திசை பதிப்பக உரிமையாளர் மை.பா. நாராயணன் நன்றி கூறிப் பேசினார். அவர் பேசுகையில், ''ஆழ்வார்கள் ஆய்வு மையம் நடத்தும் ஜெகத்ரட்சகன் பக்திப் பாசறையைச் சேர்ந்தவர், ஆனால் கலைஞரோ பகுத்தறிவுப் பாசறையைச் சேர்ந்தவர். இருந்தாலும் ஜெகத்ரட்சகன் மேடையில் பாசுரங்களைச் சொல்லும்போது அதைக் கலைஞர் ரசித்தார்'' என்று சொல்லி அவர் பங்குக்கும் இரண்டு மூன்று பாசுரங்களைப் பாடினார் நாராயணன். அதையும் ரசித்த கலைஞர் இறுதியில் பேசும்போது, ''ஜெகத்ரட்சகனுக்குப் போட்டியாக நாராயணன் வந்து விட்டார்'' என்று சொல்லவே அரங்கத்தில் சிரிப்பலை.

- புத்தன்



## காதைக் கொடுங்க...



# அன்புமணிக்கு ஆரணி!

அன்புமணியின் ராஜ்யசபா பதவிக்காலம் முடியப் போகிறது. தமிழக அரசியல் சூழல் பாராளுமன்றத் தேர்தலுக்குப் பிறகு எப்படி இருக்கும் என்று தெரியாத நிலையில், அவர் ரிஸ்க் எடுக்க விரும்பவில்லை. பாராளுமன்றத் தேர்தலில் மக்களைச் சந்திக்க முடிவு செய்துவிட்டார். தொகுதி சீரமைப்பில் வந்தவாசி தொகுதி போய் ஆரணி ஒரு தொகுதியாக மாறியிருக்கிறது. இந்தத் தொகுதியில் பெரும்பான்மையோர் வன்னியர் சொந்தங்களாக இருப்பதால், அன்புமணி, ஆரணி தொகுதியில் போட்டியிடுவார் என்கிறார்கள். இதை உறுதிப்படுத்தும்விதத்தில், ரயில்வே மற்றும் மத்திய சுகாதாரத் துறை தொடர்புடைய நிகழ்ச்சிகளை அங்கே நடத்துகிறார்கள். திண்டிவனத்திலிருந்து, நகரிக்குப் புதிய ரயில் பாதை போட அவசரமாக அடிக்கல்லும் நாட்டியிருக்கிறார்கள்.



தயாநிதிமாறன் மீண்டும் கலைஞருடன் நெருக்கமானதில் இடைப்பட்ட காலத்தில் கலைஞருடன் நெருக்கமாக இருந்து தோள்கொடுத்தவர்கள் கொஞ்சம் சங்கடத்தில் இருக்கிறார்கள். இந்த விவகாரத்தில் துவக்கத்தில் முரசொலி செல்வம் எழுதிய ஒரு கடிதத்தைப் படித்தார் பொன்முடி. அது மட்டுமல்லாமல் கொஞ்சம் விமர்சனமும் செய்தார். எனவே, இப்போது அவருக்கு வில்லங்கம் என்கிறார்கள். மத்திய அமைச்சர் ராஜா பற்றிச் சொல்லவே வேண்டாம். தயாநிதி மாறனுக்கும் அவருக்கும் இடையே சுவர் எழும்பி விட்டது. மத்திய அமைச்சர் பழனி மாணிக்கம், ''அவர்களை நம்பக்கூடாது'' என்று உட்கட்சிக் கூட்டத்தில் பேசினார். ''சமையலறை வரை போகும் வாய்ப்பு அவருக்குண்டு. நமக்கு அப்படியா?'' என்று கேட்கிறார் ஒரு பிரமுகர்.



தென்மண்டல அமைப்புச் செயலாளர் பதவி அழகிரிக்குக் கொடுக்கப்பட்டதால் மதுரைக்குத் தென்புறம் முழுவதும் அழகிரி கட்டுப்பாட்டில் வந்துவிட்டது. நெல்லை, குமரி, தூத்துக்குடி... போன்ற மாவட்டங்களில் இருந்த கட்சிக்காரர்கள், இதுவரையில் அழகிரியை அவ்வளவாகக் கண்டுகொண்டதில்லை. இப்போது, ''மதுரை நமது தலைநகரமாகி விட்டதே'' என்று நடுங்கிப் போயிருக்கிறார்கள். குறிப்பாக, அமைச்சர்கள் சுரேஷ்ராஜன், கே.கே.எஸ்.எஸ்.ஆர்... ஆகியோர் இனி 'அஞ்சா நெஞ்சன்' புகழ்பாட வேண்டும்.

- ஸ்ரீநி



# எலிகளை மயக்கும் கலைஞன்!



முன்பொரு காலத்தில்
எலிகளை விரட்டும்
குழலூதும் இசைக்கலைஞன்
கதை ஞாபகம் இருக்கிறதா?
குமரி முதல் இமயம் வரை
குழலூதிச் செல்லுமாறு
பணிக்கவேண்டும் அவனை

அவன் ராகத்தில்
மயங்கிப் புறப்படட்டும்
அரசியல் பெருச்சாளிகள்

முன்பல் துருத்தி
கண்கள் பிதுக்கி
வாலாட்டும் சாமியார் எலிகள்

3

# தஞ்சாவூர்க்கவிராயர்



தேசத்தின் இருட்டில்
பதுங்கும் கூலிப்படை எலிகளை
இழுத்துவரட்டும் குழலோசை
வீதிக்கு

அலுவலகங்களில்
லஞ்சம் தின்று கொழுக்கும்
ஆயிரம் ஆயிரம் எலிகள்
வெளிப்பட்டே தீரும்
இசைக்கு மயங்கி

சினிமாவுக்குப் பாட்டெழுதும்
எலிகள் எக்காளமிடும்
புது ட்யூன் கிடைத்த மகிழ்ச்சியில்
எல்லா வக்கிரங்களையும்
எழுதிப்பார்த்தபடி
அவன் பின் செல்லட்டும்

குழந்தைகளின் இளைஞர்களின்
எதிர்காலத்தோடு விளையாடும்
கல்விக்கூட எலிகளின்
காதில் அறையட்டும்
குழலோசை

அனைத்தையும்
ஆழ்கடலில் தள்ளி
ஒழித்துக்கட்டும்வரை
ஓயாது ஒலிக்கட்டும்
குழல் ஓசை






"க.கு.க.கட்சியோட கூட்டணி வெச்ச ரெண்டே நாள்ல அவங்களப் பத்தி தலைவர் புரிஞ்சுகிட்டதாப் பெருமைப்படறார்."

"அப்படியா?"

"ஆமாம்! அவங்க எதுக்கும் ஒத்துவரமாட்டாங்களாம்!"

- சிவா

"தலைவரே காலம் கெட்டுப் போச்சு!"

"என்னய்யா சொல்றே?"

"நீங்க தந்த அறிக்கைய வரி விளம்பரமா வேணும்னா போடறோம்னு பத்திரிகைல சொல்றாங்க!"

- தேவா

"தலைவர் பக்கம் பக்கமா கைநாட்டு வைக்கறாரே... ஏன்?"

"அவருக்குத் தெரிஞ்ச பாஷைல சுயசரிதை எழுதறார்!"

- அம்பை தேவா

"எதிர்க்கட்சி தலைவர் நல்ல 'பசை' உள்ளவருன்னு எப்படி தலைவரே கண்டுபிடிச்சீங்க?"

"அவர்கிட்டே கைகுலுக்கின போது கண்டுபிடிச்சேன், கை 'பிசு...பிசு...'ன்னு இருந்துது!"

- வெ.சீதாராமன்







● சத்யா

"ஆடுதுறை, ஸ்ரீகுமரகுருபரர் சுவாமிகள் தொடக்கப் பள்ளியில் நான் ஆசிரியர். எதிர்பாராதவிதமா என்னோட இடது கால் யானைக்கால் நோயால் பாதிக்கப்பட்டிருச்சு. மாத்திரைகள் சாப்பிட்டேன். ஒண்ணும் பயனில்லை. நாள் பூராவும் லேசான மயக்கம் இருக்கும். வேற எந்த மருத்துவத்தாலேயும் ஒரு பயனும் இல்லை. அப்பத்தான் எனக்கு கோவையில் இயங்கி வந்த இயற்கை மருத்துவ சங்கத்தோட அறிமுகம் கிடைச்சது. அவங்க எனக்கு வழிகாட்டினாங்க. வாரம் ஒருநாள் உண்ணாநோன்பு. தினமும் ஒருவேளை இயற்கை உணவுன்னு ரெண்டு வருஷம் சிகிச்சை தொடர்ந்துச்சு. யானைக்கால் வீக்கம் படிப்படியா கொறைஞ்சு... இப்ப மருந்து மாத்திரையால குணப்படுத்த முடியாத யானைக்கால் நோயையே சரிபண்ணினதுக்கப்புறம், மத்த எல்லா நோய்களையும் இயற்கை உணவு மற்றும் இயற்கை மருத்துவத்தால குணப்படுத்திட முடியும்ங்கற தீர்மானத்துக்கு வந்தேன். கடந்த இருபத்தாறு வருஷமா ஆடுதுறை இயற்கை மருத்துவச் சங்கத்தை உருவாக்கிச் செயல்பட்டு வர்றேன்'' என்கிறார் இரா. இராமலிங்கம்.

''மூத்தோர் சொல்லும், முதுநெல்லிக்கனியும் முன்னே புளிக்கும்; பின்னே இனிக்கும். அது போலத்தான் இயற்கை உணவும் இயற்கை மருத்துவமும். அஜீரணமும், மலச்சிக்கலும் ஆதிநோய். இவற்றால் வருவன மீதி நோய்கள். ஆனால் ஆச்சர்யம் இயற்கை வழி உணவுப் பழக்கத்தில் உள்ளோரை, அஜீரணமும் மலச்சிக்கலும் அண்டுவது கிடையாது!

இயற்கை வழி உணவுப் பதார்த்தங்களுக்கு நெருப்படுப்பு தேவையில்லை. எண்ணெய் வேண்டாம். **பசுங்காய்கறிகள், பழங்கள், முளைகட்டிய தானியங்கள், தேங்காய், பேரீச்சை, அவல் போன்றவையே இயற்கை வழி உணவுகள்.** எனவே, பெரும் செலவு மிச்சம். உடல் நலம் நிச்சயம்'' என்கின்றனர் இயற்கை மருத்துவச் சங்கத்தினர்.

இயற்கை மருத்துவத்தின் முதல்படி உணவு மாற்றம்தான். ''டாய்லெட்டில் உட்கார்ந்தா தானா எந்திரிக்க முடியாது. அப்படி ஒரு மூட்டுவலி! மாடிப்படி ஏறி இறங்க இயலாது. இருபத்தொரு நாள் இயற்கை உணவுக்கு மாறி வந்தேன். அடுப்பில் வேக வைத்தோ, பொரித்த உணவோ எதுவும் சாப்பிடலை. மூட்டுவலி போயே போச்சு. இப்ப நான் மூணு மாடி ஏறி இறங்குறேன். மூச்சு வாங்கலை. தினமும் குறைந்தது பத்து

# இதயம் காக்கும் இயற்கை உணவு!

கி.மீ. தூரமாவது சைக்கிள் மிதிக்கிறேன்!'' என்கிறார் எழுபத்தேழு வயதாகும் எஸ். குஞ்சிதபாதம்.

இந்த இயற்கை உணவு முறையின் மூலம் சர்க்கரை நோய், இதய நோய், இரத்த அழுத்தம், மூட்டுவலிப் பிரச்னைகள், உடல் பருமன், ஆஸ்துமா, புற்றுநோய் என்றில்லை; பெண்களுக்குத் தலைமுடி உதிர்வதி லிருந்துகூட தற்காத்துக் கொள்ளலாம். ''என்னோட கல்யாணத்துக்கு முன்னாடியே, தலைமுடி உதிரத் தொடங்கிடுச்சு. இப்ப ரெண்டு வருஷம் ஆகுது கல்யாணம் ஆகி. என்னோட மாமனார் ஆலோசனைப்படி இயற்கை உணவு மற்றும் இயற்கை மருத்துவத்துக்கு மாறினேன். இப்போ தலைமுடி உதிர்வது இல்லை'' என்கிறார் சத்யா.

**த**மிழ்நாடு இயற்கை மருத்துவச் சங்கம். தலைமையிடம் மதுரை, காந்தி மியூசியம். தமிழ்நாட்டில் ஐம்பது இடங்களில் கிளைகள். அதில் ஒன்றுதான், ஆடுதுறை இயற்கை மருத்துவச் சங்கம். ஐம்பது நகரங்களிலும் மாதாந்திரக் கூட்டம் நடத்தி 'இயற்கை உணவு மற்றும் இயற்கை மருத்துவம்' குறித்து விழிப்புணர்வைப் பரப்பி வருகின்றனர்.

''**ஆ**டுதுறையில் இது வரை முன்னூற்றாறு மாதாந்திரக் கூட்டங்கள் நடத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு வருடமும் இயற்கை நல்வாழ்வுப் பயிற்சி முகாம் நடத்தப்பட்டு, பல நகரங்களி லிருந்தும் அன்பர்கள் வந்து பயனடைகின்றனர். சமீபகாலமாக பெண்களும் இதில் ஆர்வம் காட்டுவது வரவேற்கத்தக்கது. வந்திருக்கும் நோயை முற்றிலுமாக அகற்றவும், உடலுக்குள் இனிமேல் பிணிகள் எதுவும் அண்டாமல் இருக்கவும் இயற்கை உணவும் இயற்கை மருத்துவமும் இரு கண்களாக விளங்குகின்றன!'' என்கிறார் இயற்கை மருத்துவச் சங்கச் செயலர் இரா. இராமலிங்கம்.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



* இரா. இராமலிங்கம்.



* எஸ். குஞ்சிதபாதம்

'அண்ணாமலை' தொடர் முடிந்ததும் 'செல்வி' ஆரம்பித்தேன். வேறொரு லொகேஷன், வேறொரு களம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று எங்கள் யூனிட்டில் இருந்த எல்லோருக்கும் தோன்றியது. எனவே, இலங்கையில் படப்பிடிப்பு நடத்த முடிவு செய்தோம்.

மலைப்பிரதேசமான கண்டியில் படப்பிடிப்பைத் தொடங்கி, அப்படியே கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே இறங்கி தெற்குப் பக்கத்தில் வந்து முடிப்பது எங்களுடைய திட்டம். யூனிட்டில் இருந்தவர்கள் சொன்னதும் முதலில் நானும் 'சரி' என்று சொல்லிவிட்டேன். என் உள்ளுணர்வு மட்டும் 'இப்படி வேண்டாம். வேறு மாதிரி ஆரம்பிக்கலாம்' என்று சொல்லிக்கொண்டே இருந்தது.

கிளம்பப் போகிற கடைசி நேரத்தில் நான் திட்டத்தை மாற்றினேன். 'முதல்ல கோயில்லருந்து ஷூட்டிங்கை ஆரம்பிக்கலாம். கதிர்காமத்துக்குப் போயிடலாம். அங்க சாமி கும்பிட்டுட்டு, அப்புறம் போகலாம்.'

என் அனுபவத்தில், நம் ஆழ்மனத்துக்குச் சில சமயங்களில் 'ஏதோ நடக்கப் போகிறது' என்று ஒரு சமிக்ஞை கிடைக்கும். அதைப் புறக்கணிக்கக் கூடாது.

இலங்கையில் என்ன நடந்தது என்பதைச் சொல்வதற்கு முன்னால் இதே போல எனக்கு நடந்த இன்னொரு சம்பவத்தைப் பார்த்து விடலாம்.

நான் கான்வென்ட்டிலும் லண்டனிலும் படித்தவள். என் அப்பாவிடம் வளர்ந்தவள். சில சமயங்களில் யாராவது சில சம்பிரதாயங்களைச் சொல்லும்போது எனக்கு வேடிக்கையாக இருக்கும். நான் அவர்களைக் கேலி கூடச் செய்திருக்கிறேன். ஆனால், அதையெல்லாம் நம்பியாகவேண்டிய சூழ்நிலை என் வாழ்க்கையிலும் நடந்தது.

அது ஒரு வெள்ளிக் கிழமை. மாலை நேரம். எங்கள் வீட்டில் ஒரு பெரிய ஷாண்டிலியர் விளக்கு இருந்தது. அது திடீரென்று கீழே 'டம்'மென்று விழுந்து உடைந்து சிதறியது. 'என்னடா இது! வெள்ளிக் கிழமையும் அதுவுமா இப்பிடி உடைஞ்சு போச்சே!' என்று எனக்கே மனத்துக்கு ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. ஆனால், என் கணவரிடம் அதைச் சொல்லவில்லை.

அன்று இரவு நானும் என் கணவர் சரத்குமாரும் எங்கோ வெளியே போய் விட்டு காரில் வீடு திரும்பினோம். வண்டியை வீட்டுக்குள் திருப்புவதற்கு முன்னால், ஒரு கார் வீட்டு வாசலில் நிற்பதை நான் பார்த்தேன். அதற்குள் ஒருவர் உட்கார்ந்திருந்தார். பார்ப்பதற்கு என் கணவரின் அண்ணனைப் போலவே இருந்தார். காரும் அவர் வைத்திருந்த காரைப் போலவே கறுப்பு நிறத்தில் இருந்தது.

நான் என் கணவரிடம், 'ஏங்க உங்க அண்ணன் வெளியிலயே உக்காந்துக்கிட்டு இருக்காரு?' என்று கேட்டேன். அவரும் எட்டிப் பார்த்துவிட்டு, 'ஆமா. அண்ணன் ஏன் கார்லயே உக்காந்திருக்கார்?' என்று சொல்லிவிட்டு, வாட்ச்மேனைக் கூப்பிட்டுச் சத்தம் போட்டார். 'ஏன் அண்ணனை வெளியிலயே உக்கார வெச்சிருக்கீங்க?'

'இது அண்ணன் இல்ல. வேற

யாரோ' அப்படின்னு சொன்னார் வாட்ச்மேன். நாங்கள் வீட்டுக்குள் போனோம். அது ஒரு சமிக்ஞை என்பது எனக்கு அப்போது தெரியவில்லை. இரவுச் சாப்பாட்டை மேஜையில் எடுத்து வைத்துக் கொண்டிருக்கும்போது, அந்தத் தொலைபேசி அழைப்பு வந்தது.

'திருப்பதியில் இருந்து வரும் போது என் கணவரின் அண்ணன் ஒரு ஆக்ஸிடெண்ட்டில் இறந்துவிட்டார்.' இதுதான் அந்தத் தொலைபேசியில் வந்த தகவல். நானும் என் கணவரும் பதறிப் போனோம். அவருடைய அண்ணனைப் பற்றித் தெளிவான தகவல் மட்டும் வரவில்லை. எங்கே விபத்து நடந்தது? எப்படி நடந்தது? இப்போது அவர் எங்கே இருக்கிறார்? எதுவுமே தெரியவில்லை. சிலர், 'விபத்து மட்டும் நடந்தது, அவருக்கு ஒன்றும் ஆகவில்லை' என்று சொன்னார்கள். சிலர் 'அவர் இறந்துவிட்டார்' என்று சொன்னார்கள். எல்லாமே தொலைபேசியில் வந்த தகவல்கள். எதை நம்புவது? ஆனால், அவர் இப்போது எங்கே என்பது மட்டும் யாருக்கும் சரியாகத் தெரியவில்லை.



# உள்மனம் உணர்த்திய உண்மை!

அன்றைய சூழலில் எனக்கும் என் கணவருக்கும் எத்தனையோ பேரைத் தெரியும். ஆனாலும் எங்களுக்கு என் கணவரின் சகோதரரைப் பற்றிச் சரியான தகவல் கிடைக்கவில்லை. தெரிந்த இடங்களில் எல்லாம் விசாரித்தபடி, நாங்கள் காரில் ஏறிக் கிளம்பினோம். என் கணவருக்குப் பதற்றத்தில் என்ன செய்கிறோம் என்றே தெரியவில்லை. மிக வேகமாகக் காரை ஓட்டுகிறார். செல்ஃபோனில் மாறிமாறித் தகவல் வருகிறது.



**நாங்கள் கதிர்காமம் செல்லவில்லை என்றால் சுனாமியில் மாட்டிச் செத்திருப்போம்!**

காஞ்சிபுரம் நோக்கிக் காரில் போய்க் கொண்டிருந்த போது, கடைசியாக எனக்கு அந்தத் தகவல் வந்தது. உறுதியான தகவல். 'சாரோட அண்ணன் கீழ்ப்பாக்கம் மருத்துவமனையில் இருக்கிறார். இறந்து போய்விட்டார்.'

நான் என் கணவரிடம் எதுவும் சொல்லவில்லை. அவரிடம், 'ஏங்க! வண்டியைத் திருப்புங்க. உங்க அண்ணன் கீழ்ப்பாக்கத்துல தான் இருக்காராம். தகவல் வந்தது' என்று சொன்னேன். அவர் காரைக் கீழ்ப்பாக்கத்துக்கு ஓட்டினார். கீழ்ப்பாக்கம் மருத்துவமனை வாசலில் காரை நிறுத்தியபிறகுதான், அவருடைய அண்ணன் இறந்து போன தகவலைச் சொன்னேன். குலுங்கி அழுதார்.

வீட்டில் ஷாண்டிலியர் விளக்கு உடைந்தது, அவருடைய அண்ணனைப் போலவே ஒருவர், கறுப்பு நிறக் காரில் வீட்டு வாசலில் நின்றிருந்தது எல்லாமே 'ஏதோ நடக்கப் போகிறது' என்கிற ஒரு சமிக்ஞை தானே!

இதே போல ஒரு சமிக்ஞைதான், 'செல்வி'க்காக இலங்கைக்குப் போகும் போதும் கிடைத்தது. 'கதிர்காமமா? வேண் டாங்க. அது ரொம்ப தூரத்துல இருக்கு. பிளேன்லருந்து இறங்கினவுடனே அவ்வளவு தூரம் போகணுமா?' என்று என் யூனிட்டில் இருந்த எல்லோருமே சொன்னார்கள்.

நான், 'அது கடவுள் இருக்கிற இடம். சாமியைக் கும்பிட்டுவிட்டு வேலையை ஆரம்பிக்கலாமே!' என்று அடித்துச் சொல்லிவிட்டேன். சொன்னபடி கதிர்காமத்தில்தான் ஷூட்டிங்கை ஆரம்பித்தேன். அதற்குப் பிறகு மாத்ரா வழியாக கண்டி வந்து சேர்ந்தோம்.

நான் மட்டும், எனக்குக் கிடைத்த ஏதோ ஒரு சிக்னலுக்கு மரியாதை கொடுத்து அப்படிப் படப்பிடிப்பு நடத்த வேண்டிய முதல் இடம் கதிர்காமம் என்று முடிவெடுத்திருக்கவில்லை என்றால், ஒரு பெரிய ஆபத்தில் மாட்டிக் கொண்டிருப்பேன்.

அந்த ஆபத்து 'சுனாமி.'

(ரயில் வரும்)

எழுத்து வடிவம் : **பாலுசத்யா**

# புத்தக விமர்சனம்

**லிப்கோ தமிழ் - தமிழ் - ஆங்கிலப் பேரகராதி, லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி) லிட்., மேற்கு சி.ஐ.டி. நகர், சென்னை - 35, விலை ரூ.300/-**

லிப்கோ ஸ்தாபகர் சர்மாஜி நூற்றாண்டு வெளியீடு. 'அ' முதல் 'ஹோ' வரையிலான எழுத்துக்களில் துவங்கும் சொற்களுக்கு 968 பக்கங்களில் அகராதி அமைந்துள்ளது. பிற்சேர்க்கையாக தமிழ் எழுத்துக்களின் உச்சரிப்பு வேறுபாடுகள், இலக்கண விளக்கங்கள் முதலான பல குறிப்புகளும் பயன் தரும் வகையில் இடம் பெற்றுள்ளன.

**நீங்கள் கேட்டவை, தொகுப்பு : புறா பாண்டி, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 02. ரூ.50/-**

# சுற்றுலா அனுபவம்!

வேளாண்மை, மீன்வளம், கால்நடை, செலவில்லா தொழில்நுட்பங்கள் குறித்த கேள்விகளுக்கு, பல்துறை வல்லுனர்களின் விளக்கங்கள். வாசகர்களின் பல்வேறு சந்தேகங்களுக்குப் பதில்களைத் தொகுத்திருப்பதோடு, தொடர்பு கொள்ள தொலைபேசி எண்களும் அளிக்கப்பட்டுள்ளன. வேளாண் துறையினருக்கு வேண்டிய தொகுப்பு இந்நூல்.

**அதிசய ஆலயங்கள், ஜபல்பூர் ஏ.நாகராஜ சர்மா, வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.100/-**

வட இந்தியாவில் உள்ள பல்வேறு கோயில்கள்; ஆலய அமைப்பு, வழிபடும் முறை ஆகியவற்றில் தென்னிந்தியக் கோயில்களில் இருந்து அவை வேறுபட்டிருக்கும் நிலை குறித்த தொகுப்பு. புகைப்படங்களும், ஆலயங்களோடு தொடர்புடைய கதைகளும் சுற்றுலா அனுபவத்தைத் தருகின்றன. அதிசய ஆலயங்கள் ஓர் ஆன்மிக உலா.

**விழிகளில் எத்தனை மொழிகள், ஜெய்சக்தி, திருமகள் நிலையம், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.60/-**

காதலில் கருத்தொருமித்த 'இருவர் எதிர்கொள்ளும் எதிர்பாராத பிரச்னையும், அதனால் ஏற்படும் பிரிவும், ஊடலும், முடிவில் இணைவதுமான கதைதான் இந் நாவல். நாவல் தொடக்கத்திலேயே திடுக்கிடும் திருப்பத்தைத் தந்து, பின்னர் சீரான போக்கில் செல்கிறது. காதல் கதைகளை விரும்புவோர் படிக்கச் சுவையான மொழி.

**- நேயமுகில்**












சுந்தருடைய கால்கள் எப்போதும் ஆடிக்கொண்டே இருக்கும். ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கும்போதோ, தரையில் சம்மணமிட்டு அமர்ந்திருக்கும்போதோ, அந்த ஆட்டம் தெரியும். பலமுறை அவனது அம்மா, அவனிடம் எடுத்துச் சொல்லியும் கால்கள் நின்றதில்லை.

மரியாதையே தெரியவில்லை என்பது தான் வீட்டில் உள்ளோருக்கு அவன்மீது இருந்த குறை. பெரியவர் உயர்ந்தவர் என்று எவர் வீட்டுக்கு வந்து கூடத்தில் உள்ள நாற்காலிகளில் அமர்ந்தாலும், சுந்தரும் போய் எதிரே உட்கார்ந்து விடுவான். உட்கார்ந்தவுடன் அவனை அறியாமலே அவனது கால்கள் லேசாக ஆட ஆரம்பிக்கும். பேச்சு சுவாரஸ்யம் கூடும் போது, அந்த ஆட்டம் தாளலயத்தை எட்டிவிடும்.

பேச்சு சுவாரஸ்யம் என்பது அவனைப் பொறுத்தவரை, திருப்பதி மலையின் படியேறுவதுதான். ராஜஸ்தான் பாலியில் இருந்து ஆண்டுக்கு ஒருமுறை வரும் பார்வதி அக்கா, வந்தவுடன் சுந்தரைத் தேடுவாள். கணவரோடு வந்தாலும் குழந்தைகளோடு வந்தாலும் தனியே வந்தாலும் மறக்காமல் திருப்பதி படியேறிப் போய் பெருமாள் தரிசனம் செய்வது அவளது வழக்கம். துணை சுந்தர்.

அவள் சென்னை வரும்முன்பே, அம்மாவுக்குக் கடிதம் போட்டுவிடுவாள்; சுந்தரைத் தயாராக இருக்கச் சொல்லி. ''அவனது தயாருக்கு என்ன? எப்போதும் தயார்தான்'' என்பாள் பெரியம்மா. அவனுக்கு வேலை இல்லை, படிப்பு இல்லை என்பது பெரியம்மாவின் குறைகளில் தலையானது. ஆனால், வெளியே காட்டிக்கொள்ளமாட்டாள்.

சுந்தர், உடனே மாம்பலத்தில் இருக்கும் தேவஸ்தான அலுவலகம் போய் திருப்பதியில் உள்ள கூட்டம் பற்றி விசாரித்து வந்துவிடுவான். இத்தனைக்கும், அதற்கு ஒரு வாரம் பத்து நாட்களுக்கு முன்புதான், திருப்பதி போய்விட்டு வந்திருப்பான் சுந்தர். ஏதேனும் ஓர் உறவினர் கூப்பிட்டிருப்பார். அல்லது, நண்பர்களாகச் சேர்ந்து போயிருப்பார்கள். அக்கா வரும் செய்தி வந்தவுடன், அடுத்த பயணத்துக்குத் தயாராகிவிடுவான்.

அக்கா வந்ததில் இருந்து ஆரம்பிக்கும் புராணம்.

கடந்த முறை பார்வதியோடு படியேறினபோது என்னானது என்று தொடங்கும் பேச்சு. அது ஆறு மாதங்களோ ஒரு வருடமோ முந்தைய கதையாகக்கூட



■ ஆர்.வெங்கடேஷ் ■

# அழகான பெண் வேண்டும்!

இருக்கும். ஆனால், அன்றுதான் அக்காவோடு படியேறினதாகத் தொடங்கும்.

கேட்பவருக்குக் கொஞ்சம் எரிச்சல் வரவே செய்யும். ஆனால், காண்பித்துக் கொள்ளமாட்டார்கள்.

இன்னொரு அக்கா டாட்டா நகரில் இருந்து சென்னை வருவாள். அவளுக்குக் குழந்தை பாக்கியம் இல்லை என்பது குறை. திருப்பதி படியேற அவளுக்குப் பல ஆண்டுகளாக அந்த ஒரு காரணமே போதுமானதாக இருந்தது.

கீழ்த் திருப்பதி வரை எந்த பஸ்ஸில், எந்த ரயிலில் எப்படிப் போனால், சரியாக இருக்கும்; அப்புறம் மேல் திருப்பதி படியேற எவ்வளவு நேரம் பிடிக்கும்; அல்லது திருப்பதிக் கோயில் முறையில் இருக்கும் தரிசன நேரங்கள் என்னென்ன; அதற்கு எப்படிச் சரியாகத் திட்டமிட்டால் போய்ச் சேரலாம், முக்கியமாக கீழ்த் திருப்பதி மற்றும் மேல் திருப்பதியில் என்னென்ன உணவகங்களில் நல்ல உணவு கிடைக்கும் போன்ற அத்தனை விவரங்களும் சுந்தரிடம் துல்லியமாக உண்டு.



என்ன ஒரு பிரச்னை என்றால், இதையெல்லாம் அவனிடம் உட்கார்ந்து கேட்டால், ஒன்றும் புரியாது. கோவையாக அவனுக்குச் சொல்லத் தெரியாது. இங்கே ஒன்று சொல்லுவான், திடீரென்று வேறொன்று சொல்வான். இரண்டுக்கும் உள்ள தொடர்பைச் சேர்க்கவே முடியாது.

'பேசக் கூடச் சரியாத் தெரியல, சரியான அச்சுபிச்ச' என்று பெரியம்மா குறைபட்டுக்கொள்வாள்.

பெரியவர்கள் படியேறும்போது, சுந்தரைப் போல் உதவியானவர்கள்

எப்போதும் தேவை. உடலை மட்டும் தூக்கிக்கொண்டு மற்றவர்கள் ஏறினால் போதும். தேவைப்படும் பிற பொருட்கள் எல்லாவற்றையும் சுந்தர் தோளில் சுமந்துகொள்வான்.

**பா**ர்வதி அக்காவின் அப்பா, சுந்தருக்குச் சித்தப்பா. அவருக்குத் தம் வக்கீல் தொழிலில் பிரச்னை ஏற்பட்டபோது, ஒவ்வொரு மாதம் அமாவாசை அன்றும் திருப்பதி செல்லத் தொடங்கினார். அவருடைய ஜாதகத்தைப் பார்த்த ஒரு ஜோதிடர், 'திருமலைக்குப் படியேறி வந்து வணங்குகிறேன் என்று வேண்டிக்கொள்ளுங்கள், எல்லாம் சரியாகிவிடும்' என்றாராம். கிட்டத்தட்ட இருபத்தியொரு அமாவாசைகள் அவர் படியேறினார். அவரோடு சுந்தரும் துணைக்குப் போக ஆரம்பித்தான்.

கீழ்த் திருப்பதியில் இருந்து மேலே ஏற குறைந்தபட்சம் நான்கரை மணி நேரம் ஆகும். சித்தப்பா மெதுவாக ஏறுவார். அவருக்கு வயது ஐம்பதுக்கும் மேல். அவருக்குத் தெரிந்த ஸ்லோகங்களை எல்லாம் சொல்லிக்கொண்டே மலையேறுவார். சுந்தர் அவரோடே இருப்பான். முதலில் ஐந்நூறு படிக்கட்டுகள் வரை உற்சாகம் மிதக்கும், விறுவிறுவென ஏற முடியும். அதன்பிறகுதான் உடலின் உபாதைகள் தெரியத் தொடங்கும்.

அடுத்த நூறு படிக்கட்டுகளுக்குள் முட்டுகள் நோகத் தொடங்கும். சித்தப்பா நின்றுவிடுவார்.

சுந்தர் சிரித்துக்கொண்டு நிற்பான். அவன் தோளில்தான் தண்ணீர் பாட்டில், ஒரு மாற்று உடை, துடைக்கும் டவல் எல்லாம் கொண்ட பை இருக்கும்.

காளிகோபுரம் தாண்டியபின், ஓரளவுக்குத் தரைமட்டமான சாலைப் பயணம் தொடரும். ஒரு கட்டத்துக்குப் பின் சாலையோரம் நடக்கவேண்டும். நடக்க நடக்க மாளவே மாளாதோ என்னும்படியான நீண்ட பயணம் அது.

சித்தப்பாவுக்கு ஒரு கட்டத்துக்கு மேல் நூறு படிக்கட்டுகள் வரைகூட நடக்க முடியவில்லை. நூறு ஐம்பதும் ஆயிற்று. பின்னர் அரை மணி நேரம் ஒரு மலையோரத்தில் அமர்ந்து காற்று வாங்கத் தொடங்கினார். உண்மையில் கடவுள் தன்னைச் சோதிப்பதற்காகவே இத்தனை கடுமையான பயணத்தை ஏற்படுத்தியிருக்கிறார் என்று அவருக்குத் தோன்றியது.

என்ன விரும்புகிறார் கடவுள்? என் உறுதி, என் முயற்சி, என் கர்வம், என்னுடைய நான் எல்லாவற்றையும் இந்தப் படிக்கட்டுகளில் சமர்ப்பித்துவிட்டு மேலே வரச் சொல்கிறாரோ? சட்டெனதான் நிறைய யோசிக்க, இந்த நீண்ட நடை உதவுவதை அவரால் உணர முடிந்தது. இப்படி ஒரே சீராக நான்கு மணி நேரம் யோசிக்கவே முடிந்ததில்லையே.

## முதலை செருப்பு!



• வா.மு.கோமு

**மு**ற்போக்கு, மார்க்சியம், தலித்தியம், பெண்ணியம்னு ஏகப்பட்ட எழுத்துங்க இருக்கே... அதுப்பத்தி உங்க கருத்து என்ன?

ஒருத்தன் போட்டிருந்த செருப்பு வித்தியாசமா இருந்தது. இது என்ன செருப்பு, எங்க வாங்கினதுன்னு மத்த ஆளு விசாரிச்சிருக்கான். இது



முதலைச் செருப்பு. அமேஸான்லதான் கிடைக்கும்னு சொல்லியிருக்கறான். இவனுக்கும் அதே மாதிரி செருப்பு போட ஆசை, வெறி, லட்சியம். சொத்து பத்தையெல்லாம் வித்து பயணம் பண்ணி அமேஸான் காட்டுக்குப் போயி, நதியை அடைஞ்சுட்டான். அந்த நதியில இருந்த ஒரு முதலைகூட சண்டை போட்டு அதைக் கொன்னு, மல்லாக்கத் திருப்பி போட்டதுக்கப்புறம் தெகைச்சுப் போயி, ''ஐயோ இந்த மொதலையோட கால்ல செருப்பில்லையே''ன்னு அலறினானாம். அப்படியானதுதான் இந்த ஆளுங்களோட யுக்திங்க... பத்திரிகையில பாலியல் தொழிலாளிகள் முடிஞ்சு இப்ப திருநங்கைகளின் சுயசரிதை தொடங்கிடுச்சு. சுயசரிதைன்னாலே மறைக்கப்பட்ட உண்மைன்னு அர்த்தம்.

**சாரு (நிவேதிதா) உங்களைத் தன்னோட வாரிசுன்னு அறிவிச்சிருக்கிறாரே?**

அதை விடுங்க. இப்ப நானும் என்னோட வாரிசுகளை அறிவிக்கிறேன். ஜெயமோகன், எஸ்.ராமகிருஷ்ணன், மயில் ராவணன், ஆர்.மணிமாலா, படுதலம் சுகுமாரன் இவங்க அஞ்சு பேரும் என்னோட வாரிசுக!

'செந்தூரம்' இதழில்-எழுத்தாளர் வா.மு.கோமு சொன்னது -

**- அமிர்தா**

சுந்தர் காலை ஆட்டிக்கொண்டு படிக் கட்டு ஓரத்தில் உட்கார்ந்திருந்தான். மேலே படியேறுவோரை அவன் பார்வை தொடர்ந்துகொண்டிருந்தது. வலி, வேதனை என்று இதுநாள்வரை ஒரு முறை கூட அவன் பாயை விரித்துப் படுத்ததில்லை என்பது ஏனோ அப்போது ஞாபகம் வந்ததுபோல் தோன்றியது.

''கால் வலிக்கலையாடா சுந்தர்?''

''இல்ல சித்தப்பா. நடந்து நடந்து பழக்கமாயிடுச்சு.''

''நீ மட்டும் வந்தா எவ்வளவு சீக்கிரம் மலையேறுவே?''

''ரெண்டரை மணி நேரம் போதும் சித்தப்பா.''

இவனை இத்தனை ஆண்டுகளாக ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை என்பது அவருக்கு மனத்தில் உறைத்தது. எத்தனை ஆண்டுகளாக மலையேறுவான்? அவருக்கு நினைவு தெரிந்து பத்து, பன்னிரண்டு ஆண்டுகளாக இருக்கலாம்.

ஆறாம் வகுப்பு கூட முடிக்கவில்லை. கடலூர் பக்கம் ஏதோ ஒரு ஊரில் அவன் அப்பாவுக்கு அரசு வேலை இருந்தது. அவர் காலமானபின்பு, இவனை அழைத்துக் கொண்டு இவனது அம்மா சென்னை வந்து சேர்ந்தது, அவர்களது பெரிய வீட்டில் இவர்களைக் குடிவைத்தது எல்லாம் ஒரு கனவுபோல் அவருக்கு ஞாபகம் வந்தது.

இன்றுவரை, இவனது அம்மா தனக் கென்றோ, இவனுக்கென்றோ எதுவுமே வந்து கேட்டதில்லை. வக்கீல்கள் நிறைந்த குடும்பத்தில், இப்படி ஒரு ஜீவன் இருப் பதே யார் கவனத்திலும் படவில்லை. ஆனால், அலுவலகத்தில் அவன் நிற்பதை யும் ஏதோ உதவுவதையும் அவர் கவனித் திருக்கிறார்.

அவ்வப்போது, அவன் ஒரு அச்சுபிச்சு,

பேசத் தெரியவில்லை, காரிய சாமர்த்திய மில்லை என்றெல்லாம் பேச்சு அடிபடு வதைக் காதில் வாங்கியிருக்கிறார். யாரும் அவனைப் பள்ளிக்கூடம் போவென்றோ, படியென்றோ வற்புறுத்தியதில்லை. பல ருக்கும் சுந்தர் சௌகரியமாக இருந் திருக்கிறான். எது வேண்டுமானாலும் ஓடிப்போய் செய்துதரக்கூடிய சௌகரியம் கிடைத்தால், யார்தான் வேண்டாம் என்பார்கள்.

''மாசத்துக்கு எத்தனை தடவைடா திருப்பதி வருவே?''

''ரெண்டு மூணு தடவை வந்துடுவேன் சித்தப்பா...''

''பெருமாள்கிட்ட என்ன வேண்டிப்ப?''



''எங்கம்மா மாதிரி அழகான ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கணும்.''

''எங்கம்மா மாதிரி அழகான ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக் கணும். அதுக்கு நல்லதா ஒரு வேலை கிடைக்கணும்.''

வீட்டினர் நடுவே இவன் இப்படிப் பேசியிருந்தால், அவன் அம்மாவே கோபப்பட்டு இருக்கக்கூடும். இப்படி வளர்ந்து நிற்கும் ஒருவன் பேசும் பேச்சாக இது எடுத்துக்கொள்ளப்பட்டிருக்காது. அசட்டுத்தனம் என்றிருப்பார்கள். சித்தப்பா அப்போதும் எதுவும் பேசவில்லை.

அடுத்த அமாவாசைக்குத் திருப்பதி பயணம் அவர் மேற்கொள்ளும்முன் வேறொரு விஷயம் நடந்தது. ஒரு நாள் மாலை அவரது அலுவலகத்தில் அமர்ந் திருந்தபோது, கூரியர் எடுப்பவன் ஒருவன் கதவுக்கு வெளியே நிற்பதைப் பார்த்தார். அவன் போனபின்பு, அலுவலக குமாஸ் தாவைக் கூப்பிட்டார்.

''தினமும் எத்தனை கூரியர் அனுப்பு வீங்க கணேசன்?''

''கட்சிக்காரங்களுக்கு லெட்டர் போட்டுடுவோம் சார். கூரியர்ல அனுப்பறது ஒரு நாலைஞ்சு கவர்ங்க இருக்கும் சார். ''

''நாளையிலேருந்து மெட்ராஸ்க்குள்ள அனுப் பற கூரியரையெல்லாம் சுந்தர்கிட்ட கொடுங்க. அவன் போய் டெலிவரி பண்ணட் டும்.''

அப்போது ஆரம் பித்தது அவன் பய ணம். இப்போதும் நீங்கள் அவனை ஏதே னும் ஒரு சாலையில் பார்க் கலாம். மழையோ வெயிலோ எதுவானாலும், வேட்டியைக் கொஞ்சம் மேலே கட்டிக்கொண்டு, இரண்டு தோள் களிலும் ஜோல்னா பைகள் நிறைய கடி தங்கள் தொங்க, விறுவிறுவென உங்களை ஒருவர் கடந்து போனால், ஒரு நிமிடம் நின்று பாருங்கள். கால்கள் கொஞ்சம் வளைந்து மூங்கில் கழி போல் இருக்கும். தாமரை இலையென பாதங்கள் படர்ந்து இருக்கும்.

இப்போதும் பேச்சில் கொஞ்சம் அசுக பிசுகுத்தனம் உண்டு. ஆனால், அவன் ஆசைப்பட்டதில் இரண்டாவது நடந்து விட்டது. விரைவில் முதலாவதையும் நடத்திவிடவேண்டும் என்று அவன் அம்மா மெனக்கட்டுக் கொண்டிருக்கிறாள். நல்ல அழகான பெண் இருந்தால், கொஞ் சம் சொல்லுங்களேன், ப்ளீஸ்! ●



குறிப்பு: இத்தொடரில் இடம் பெற்றுள்ள மாடல் படத்துக்கும் தொடருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

# லவ் அரேஞ்சுடு மேரேஜா?

அப்துல்லா, ஒரு பெரிய எக்ஸ்போர்ட் நிறுவன உரிமையாளர். அவரது மகள் ஃபாத்திமா. கல்லூரிப் படிப்பை முடித்த மகளுக்கு வீட்டில் மணமகன் தேட ஆரம்பித்தார்கள். பெற்றோர்கள் வேறு எந்தப் பையனையும் பேசி முடிவு செய்வதற்கு முன், தன் காதல் விஷயத்தைச் சொல்லி விடுவது என்று முடிவு செய்தாள் ஃபாத்திமா. அப்பா அம்மாவிடம் மனம்விட்டுப் பேசினாள்.

ஃபாத்திமா காதலித்தது அப்துல்லாவின் பால்ய நண்பரான இப்ராஹிமின் மகன் முஸ்தஃபாவைத்தான்!

'ரொம்ப சௌகரியமாகப் போய்விட்டது' என்று இரு குடும்பத்தினரும் நினைத்ததில் ஆச்சர்யமில்லை. பரஸ்பரம் ஒரே மதம், முன்பே தெரிந்த குடும்பங்கள். ஆனால், முஸ்தஃபாவின் குடும்பம் கிராமம், ரைஸ்மில் வைத்திருக்கின்றனர். எனினும், 'பையன் இன்ஜினீயரிங் படித்திருக்கிறான்; நல்ல வேலை; நம் பெண்ணை வைத்துக் காப்பாற்றுவான்; எனவே, அந்தஸ்து வித்தியாசம் பார்க்கவேண்டாம்' என்று ஃபாத்திமாவின் பெற்றோருக்குத் தோன்றியது. மகளின் காதல் திருமணத்துக்கு ஒப்புதல் அளித்தார்கள். நல்லபடியாக ஃபாத்திமா-முஸ்தஃபா திருமணம் நடந்து முடிந்தது.

அடுத்த மாதமே முஸ்தஃபாவுக்கு துபாயில் வேலை. ஃபாத்திமாவையும் கூடவே அழைத்துக்கொண்டு போக, இரு குடும்பத்தினரும் ஏர்போர்ட் வரை வந்து அவர்களை வாழ்த்தி வழியனுப்பி வைத்தார்கள்.

எல்லா பெற்றோரும் இப்படி இருந்தால், டி.வி.யில் வரும் பொங்கல் / தீபாவளி பட்டிமன்றங்

• டாக்டர் விஜய் நாகசாமி •

களுக்கெல்லாம் (காதல் Vs பெற்றோர் நிச்சயித்த திருமணம்) வேலையில் லாமல் போய்விடுமே என்கிறீர்களா?!

பொறுங்கள்! 'இன்றைய பெற்றோர் பெரும்பாலும் காதலுக்குப் பச்சைக்கொடி காட்டுவது காலத்தின் கட்டாயத்தினாலா? மனப் பக்குவத்தினாலா?' என்று வேண்டுமானால் பட்டி மன்றத் தலைப்பை மாற்றிக் கொள்ளலாம்!

திருமண வயதை எட்டும் சமயத்திலேயே இன்று பெரும்பாலான இளைஞர்கள் (பெண்களும்தான்) தங்கள் வேலை, பொருளாதாரம் போன்றவற்றை நிர்ணயித்துக்கொண்டு சுதந்திரமாக இயங்கிக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, திருமணம் குறித்தும் அவர்களே சுதந்திரமாக முடிவெடுக்கிற மனப்போக்குத் தோன்றியிருக்கிறது. ஆண்-பெண் சகஜமாகப் பழகும் வாய்ப்புகளைச் சமூகம் அங்கீகரித்துள்ளதால், காதலுக்கான சூழலும் களமும் உழவோட்டி ஆறப்போட்ட வயல் மாதிரி தயார்! அங்கே இங்கே கொஞ்சம் பார்வை பரிமாற்ற விதைகள் தூவி, மனப்பரிமாற்ற பாசனம் செய்தால் பச்சென்று பிடித்துக்கொண்டு வளர்ந்துவிடுகிறது காதல் பயிர்! அப்புறம் சந்தோஷப்படாத பெற்றோரை, சம்பந்தப்பட்ட இளசுகள் என்ன, சமூகமேகூட பத்தாம்பசலியாகத்தான் பார்க்கிறது!

இதனாலெல்லாம் அரேஞ்ஜ்ட் மாரேஜுக்கு மவுசும் மகிமையும் குறைஞ்சுடுச்சான்னா, அதுதான் இல்லை!

அப்துல்லா வீட்டிலேயே அடுத்த



கல்யாணம் அரேஞ்ஜ்ட்தான்... மகன் இம்ரானுக்குத் திருமணம் முடித்து வைக்க முடிவுசெய்தார்கள் அப்துல்லா தம்பதி.

''ஃபாத்திமா மாதிரி இவனும் காதல் கீதல்னு...'' என்று மனைவி ஆரம்பிக்க, ''அம்மா, நீயும் அப்பாவும் முடிவு செய்யும் பெண் யாரானாலும் எனக்கு ஓ.கே.'' என்று சொல்லிவிட்டான் இம்ரான்.

மகனுக்காக தங்களது அந்தஸ்துக்கு ஏற்ற பெரிய பிசினஸ் மேக்னட் ஒருவரது மகளைப் பேசி முடித்தார்கள். தங்கள் மகள் திருமணத்தைப் போல இல்லாமல், மகனுடைய திருமணத்தை வெகுவிமரிசையாக

நடத்தினார்கள்.

ஹனிமூனிலிருந்து திரும்பியதும், இம்ரான் வழக்கம்போல குடும்ப பிஸினசைக் கவனிக்கத் துவங்கினான். புது மருமகள் மெகர், வீட்டில் வளையவந்தாள். புகுந்த வீட்டின் புது சூழ்நிலையில் உடனடியாக அட்ஜஸ்ட் செய்துகொள்வது அவளுக்குச் சற்று சிரமமாகத்தான் இருந்தது. அதை அப்துல்லா தம்பதிகள் புரிந்துகொண்டார்கள்.

ஐந்தாறு மாதங்களாகி இருக்கும். அப்துல்லாவும், அவரது மனைவியும் தனியாக இருந்த சமயத்தில் மெதுவாக, ''மருமகள் விஷயத்தில் நாம தவறு செஞ்சிட்டோம்னு தோணுது'' என்றார்




அப்துல்லா. எனக்கும்தான் என்றார் அவரது மனைவி.

அவர்களைக் குற்ற உணர்வு குடைய ஆரம்பித்தது!

(அழைப்பு தொடரும்)

**எழுத்து வடிவம்: எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**

# 'வலை'யோடு

## www.archive.sensesofcinema.com

உலக சினிமா குறித்த ஆர்வம் தமிழ் கூறும் நல்லுலகில் பொங்கிப் பிரவகிக்கும் காலமிது. அயல்நாட்டு சினிமாக்கள் அனைத்துமே 'உலக சினிமா' என்ற வார்த்தைக்குள் அடக்கம் என்றபோதிலும் தரமான, நேர்மையான சினிமா முயற்சிகளே பொதுவாக அப்பெயரில் அழைக்கப்பட்டு வருகின்றன.

அவ்வகையில் தீவிரமாக இயங்கிய திரைக்கலைஞர்களைப் பற்றிய, முழுமையான அறிமுகத்தை வழங்குகிறது மேலே உள்ள இணையதளம்.

புகழ்பெற்ற இயக்குநர்கள்; அவர்களின் திரைப்படங்கள்; அதற்கான விமர்சனங்கள்; பெற்ற விருதுகள் என்று அனைத்துத் தகவல்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இணைய இதழாக வெளிவரும் senses of cinemaவின் முந்தைய இதழ்களையும் களஞ்சியத்தில் (archive) நுழைந்து, புரட்டிப் பார்க்கலாம்.

நல்ல சினிமாவின்மீது அக்கறை கொண்டவர்களுக்கு ஆறுதலளிக்கும் இணைய தளம் இது.



## www.carnaticindia.com

தென்னிந்தியாவின் மரபிசையான கர்நாடக சங்கீதம் பற்றிய இணைய தளங்களுள் இதுவும் ஒன்று.

இசை குறித்த செய்திகள், கர்நாடக இசையைக் கற்றுக்கொள்ளும் முறை, குரல்வளப் பாதுகாப்பு, மேளகர்த்தா ராகங்களைப் பற்றிய குறிப்புகள், பிரபல இசைக் கலைஞர்களின் புகைப்படங்கள், மியூசிக் தெரபி பற்றிய தகவல்கள்... என்று இசை தொடர்பான சகலத்தையும் இத்தளம் உள்ளடக்க முயல்கிறது.

வண்ணமிகு வடிவமைப்பு கண்களைக் கவர்கிறது. உங்கள் வாசிப்பறைக்குள் நுழைந்துகொண்ட மார்கழிக் குளிர் வெளியேற மாட்டேன் என்று அடம்பிடிக்கவும் செய்யலாம்.

## www.epw.org.in

இந்தியாவின் பாரம்பரியமான ஆய்விதழ்களில் ஒன்றான 'எக்கானமிக் அண்ட் பொலிடிக்கல்', சென்னையிலும் கூட சில இடங்களில் மட்டுமே கிடைக்கிறது. என்றாலும், நடப்பிதழோடு முந்தைய நான்கு இதழ்களையும் இந்த

# விளையாடு!



இணையத்தில் இலவசமாகவே படிக்கலாம்.

'அரசியல், பொருளாதாரம் மற்றும் சமூகம் குறித்த துறை சார்ந்த அறிவு ஜீவிகளின் கட்டுரைகளோடு வெளிவரும் இவ்விதழ், ஆய்வு மாணவர்களுக்கும் தீவிர வாசகர்களுக்கும் அமுதசுரபி. அவ்வப்போது வெளிவந்த சிறப்பிதழ்களையும் படித்துக் கொள்ளலாம்.

## www.indianfashion.in

**கா**லத்துக்குத் தகுந்தவாறு புதிய வடிவமைப்புகளில் ஆடை அணிகலன்களைத் தேர்ந்தெடுப்பதும்கூட ஒரு கலைதான்.

ஃபேஷன் பற்றிய செய்திகள், சமீபத்திய ஃபேஷன் நிலவரம், ஃபேஷன் வீக், வடிவமைப்புகள், நகைகள், திருமணங்களுக்கான ஆடை அணிகலன்கள், ஒப்பனை, சருமப் பாதுகாப்பு, அழகு சாதனப் பொருட்கள், நகங்கள் பராமரிப்பு, காலணிகள், சிகையலங்காரம்... என்று ஏகப்பட்ட குறிப்புகளை இந்த இணைய தளத்தில் அள்ளிக் குவித்திருக்கிறார்கள்.

மேலைநாட்டு வடிவமைப்புகளுக்கு எல்லோராலும் ஹைஜம்ப் செய்ய முடியாது. ஆனால், இந்திய அளவில் மரபின் ஒத்திசைவோடு உடையணிய விருப்பமுள்ளவர்களுக்கு இத்தளம் உபயோகமாக இருக்கும்.

- ஸாந்த்

நல்ல
வேளை
என்னைச்
சொல்லல.

என்ற நகையை மட்டும் அணிந்த, தம்மை அகழ்வாரையும் தாங்கும் 'பூமா-தேவி'.

● ரா.பிரசன்னா, மதுரை

**தேடல் என்பது எது வரை?**

'நாம்' காணாமல் போகும் வரை.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

**புத்திசாலிகூட தோற்கும் இடம் எது?**

உங்கள் ஆசையைக் கெடுப்பானேன். நான் தோற்றுவிட்டேன்.

# உங்களுக்குப் பிடித்த உலகஅழகி!

● என். சண்முகம், திருவண்ணாமலை

**உங்களுக்குப் பிடித்த உலக அழகி யார்?**

இந்த உலகத்தைவிட இயற்கையான அழகி இருக்க முடியுமா? கண்ணுக்கு மை அழகு; பெண்ணுக்குப் பொறுமை அழகு. எனக்குப் பிடித்த உலக அழகி, பொறுமை

● லட்சுமி செங்குட்டுவன், வேலூர்

**திருமணம் என்ற ஒன்று அவசியம் தேவைதானா...?**

இளமையில் தேவை; முதுமையில் அவசியம்!

● பத்மா கோபாலன், மேற்கு மாம்பலம்

***ஆணுக்கும் பெண்ணுக்கும் பெருமை எது?***

தண்டச் சோத்து தடிராமனாக இருந்தாலும், 'கல் ஆனாலும் கணவன்' என்று ஆணுக்குப் பெருமை. வள் வள்ளென்று விழுந்தாலும் 'நாய் ஆனாலும் நாயகி' என்று பெண்ணுக்குப் பெருமை. கல்லைக் கண்டால் நாய் குரைக்கும். நாயைக் கண்டால் கல்லும் கரையும்.

● **செல்வகுமார், அறந்தாங்கி**

***கர்ணன் - கும்பகர்ணன் என்ன ஒற்றுமை?***

இருவருமே கொடுத்து வைத்தவர்கள். வள்ளலாய் வாரிக் 'கொடுத்து வைத்தவன்' கர்ணன். வாரி எடுத்துக்கொண்டு போனாலும் நிம்மதியாகத் தூங்கி 'கொடுத்து வைத்தவன்' கும்பகர்ணன். இருவருமே செஞ்சோற்றுக் கடனுக்காக மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்தவர்கள்.

● **அனன்யா, திருச்சி**

***அகத்தின் அழுக்கு முகத்தில் தெரிய மாட்டேங்குதே...?***

அகத்தின் அழுக்கு நகத்தில் தெரியும். குற்ற உணர்வில் டென்ஷனாக விரல் நகத்தைக் கடித்துக் கொண்டிருப்பார்கள்.

● **கிருஷ்ண ராஜ்கோபால், விருகம்பாக்கம்**

***கற்பக விருட்சம், அல்லாவுதீன் அற்புத விளக்கு, அமுதசுரபி இம்மூன்றும் உங்களுக்குக் கிடைத்தால்?***

கற்பக விருட்சத்தின் நிழலில், அல்லாவுதீன் அற்புத விளக்கின் வெளிச்சத்தில் அமுதசுரபியைப் படிப்பேன்.

● **ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி**

***ஆவியுடன் பேச முடியும் என்றால், எந்த ஆவியுடன் பேசுவீர்கள்?***

நீர் ஆவியானால் பேசுவேன்.

● **மல்லிகா அன்பழகன், சென்னை**

***ராமாவதாரத்துக்கும், கிருஷ்ணாவதாரத்துக்கும் நீங்கள் காணும் வித்தியாசம் என்ன?***

ஒருவனுக்கு (ராமன்) ஒருத்தி(சீதை) ராமாவதாரம். ஆயிரம் பேர் இருந்தாலும் அந்த ஒருத்திக்குத்தான் (ராதை) அந்த ஒருவன் (கண்ணன்) கிருஷ்ணாவதாரம்.

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

***'எலாக்' வாட்டர் ஹீட்டர் விளம்பரத்துக்கு எந்த அடிப்படையில் கிரேசியைத் தேர்ந்தெடுத்தார்கள்?***

'நட்புக்காக'. விளம்பரத்தை இயக்கிய காந்தன் என் ஸ்கூல் நண்பன். ஹீட்டர் தயாரிக்கும் கணேஷ் என் கூல் - நண்பன்.

● **பா.அசோக், விருதுநகர்**

***தூங்கும்போது நாம் ஏன் கண்களை மூடிக் கொள்கிறோம்?***

கண்களை நாமாக மூடிக்கொண்டால் தான் அது தூக்கம். மற்றவர்கள் வந்து மூடி விட்டால் அது நாலு பேர் தூக்க வேண்டிய தூக்கம்.



''உடம்பு சரியில்லேன்னா டாக்டரிடம் போய்க் காண்பிப்பது போல, தலைமுடி மீதும் அக்கறை எடுத்துக்கொண்டு பராமரிக்க ஹேர் ஸ்டைலிஸ்டிடம் போகவேண்டும். ஒவ்வொருத்தருக்கும் வெவ்வேறு விதமான முடி; அதேபோல பிரச்னைகளும் பலவிதம். ஆனால் யாருமே ஹேர்ஸ்டைலிஸ்டிடம் போய் அட்வைஸ் கேட்பதில்லை. ஏன் இத்தனை அலட்சியம்..?'' கையில் கத்திரிக்கோலும் வாயில் புன்னகையுமாகக் கேட்கிறார் ஹேர் ஸ்டைலிஸ்ட் நவ்ஷீன் ஃபாத்திமா.

தலைமுடி நிபுணர் நவ்ஷீன், ஜெர்மன் கம்பெனியான ஷ்வாஸ்கோஃபில் டெக்னிகல் அட்வைஸர்!

சமீபத்தில் சென்னையில் ஷ்வாஸ்கோஃப், தங்கள் கம்பெனியின் புதிய ஹேர் கலர் கலெக்ஷனை அறிமுகப்படுத்தி, 'எஸன்ஷியல் ஒக்ஸ்' என்ற கலர் திருவிழாவை நடத்தியது. ஹேர்ஸ்டைலிஸ்ட் நவ்ஷீனிடம் பேச்சுக் கொடுத்தோம்...

''காலேஜ் கேர்ள்ஸுக்கென ஏக வெரைட்டி இருக்கு. யங் ஏஜுக்கு எந்தக் கலர் போட்டாலும் அழகா இருக்கும். வயலட், ரெட் போடலாம். அவை எக்ஸலன்ட் கேமோஃப்ளேஜ் கலர்ஸ். இந்தக் கலர்ஸை முடியில் போட்டால் வீட்டுக்குள்ளிருந்தால் தெரியாது; வெயிலில் போனால்தான் கலர் பளபளக்கும். மற்றபடி ஹவுஸ் வொய்ஃப்ஸ்க்கு பர்கண்டி, வயலட், ரெட், சாக்லேட் பிரௌன், காப்பர்... என நிறைய உள்ளன. நல்ல சிவப்பாக இருப்பவர்கள் கோல்ட் போடலாம். சரும நிறம், முகத்தின் ஷேப், வயது, வேலை... இவற்றுக்கு ஏற்றாற்போல் ஹேர் கலரிங் பண்ணலாம்...'' என்கிறார் 'தலை'யாரி நவ்ஷீன்!




''கேசப் பராமரிப்பு பற்றி நம்மில் எத்தனை பேர் அக்கறை காட்டுகிறோம்? பத்திரிகை, டீ.வி. விளம்பரத்தைப் பார்த்து மாதம்



✱ நல்ஷீன் ஃபாத்திமா

# 20க்கு ஓ.கே... 35க்கு 'நோ'.கே..!

ஒரு ஷாம்பூ, ஹேர் ஆயில்... என மாற்றி மாற்றி உபயோகித்து, எதிலும் திருப்தி அடையாமல், தலைமுடியும் 'காணோம்' என விளம்பரம் கொடுக்கும் ஸ்டேஜில் விழித்துக் கொள்வோம். என்ன செய்தால் தலைமுடி பளபளவென்று ஹெல்தி யாக இருக்கும்? பொடுகுத் தொல்லை போகும், கற்றை கற்றை யாகச் சீப்பில் முடி போகாமலிருக் கும்... எனக் கவலைப்படுவதை விட்டுவிட்டு நம் 'தலை'யாயப் பிரச்னைகளை ஒரு ஹேர் ஸ்டைலிஸ் டிடம் வைக்க வேண்டும்.

முடிப் பராமரிப்பு குறித்து இருபது வயதிலிருந்தே கேர் எடுக்க வேண் டும். முப்பத்தைந்துக்குப் பிறகு அலட்சியப்படுத்தாமல் ட்ரீட்மென்ட் எடுத்துக்கொள்ள வேண்டும். பலருக்கு முடி வெடிப்பு இருக்கும். இதை அடிக்கடி ட்ரிம் செய்ய வேண்டும். ஆயில் மஸாஜ் எடுத்துக் கொண்டால் முடி ஆரோக் கியமாக வளரும். நல்ல தரமான ஷாம்பூ, கண்டிஷனர் யூஸ் பண்ணணும். ஸ்பா ட்ரீட்மென்ட் உண்டு. டாமேஜ் ஆன ஹேர், கலர்ட் ஹேர், கர்லி ஹேர், ட்ரை ஹேர்... என அவரவர் முடிக் கேற்ப ஹேர் கேர் புராடக்ட்டுகள் உள்ளன. முன்னேயெல்லாம் ஹேர் டை என்றால் ஜெட் ப்ளாக் கில் தலைமுடிக்குச் சாயம் போட்டுக் கொள்வார்கள். ப்ளாக் இஸ் போரிங்... இப் போது எத்தனை கலர்ஸ்... சீஸனுக்கேற்ற வாறு கலர் கலெக்ஷன்ஸ் உண்டு. ஆட்டம்-விண்டர், ஸ்ப்ரிங்-சம்மர் என்று! வாங்க, வாங்குங்க, பூசுங்க... அழகி நீங்கதான்... ப்ராமிஸ்'' என்கிறார்.

''பொதுவா ஓவல் ஷேப் ஃபேஸ் தான் பர்ஃபெக்ட்! ரவுண்ட், டயமண்ட், அசலம் என ஃபேஸில் எத்தனையோ ரகம்... ஹேர்ஸ்டைல் சரியாக இருந்தால், முகத்திலிருக்கும் எந்தக் குறையையும் மறைக்கமுடியும். ஒவ்வொரு நாளும் ஹேர்ஸ்டைல் ட்ரெண்ட் மாறிக்கிட்டே வருது... காலத்துக்கேற்றாற்போல நாமும் ஸ்டைலா இருக்கணும்...'' என்கிறார் நவ்ஷீன் ஃபாத்திமா.

'தல' சொன்னா சரிதான்...

– லதா சேகர்

அன்று விநாயக சதுர்த்தி.

நிவேதனத்துக்காகக் கொழுக்கட்டை செய்து கொண்டிருந்தார்கள் பெண்கள். அப்போது ஒரு பெண் கேட்டார்.

''கொஞ்சம் பூர்ணம் கொடுங்க. என் கிட்ட தீர்ந்துடுத்து.''

(பூர்ணம் என்பது, மாவினுள் வைக்கப் படும் தேங்காய், வெல்லம் கலந்த கலவை.)

அதைக் கேட்ட பகவான் ரமணர்,

''நீங்க கொழுக்கட்டை பண்றதான்னா நெனச்சேன். உபநிஷத் பேச்சா இருக்கே. பாத்திரம் நிறைய வெச்சிருந்ததும் பூர்ணம் தான். இதோ... சின்னச் சின்னதா கொழுக் கட்டைக்குள்ள வெச்சிருக்கறதும் பூர்ணம் தான். இதைத்தான், 'பூர்ணத்துல இருந்து பூர்ணம் வெளிப்பட்ட பின்னாலும், பூர் ணம் பூர்ணமாகவே இருக்கிறது'ன்னு ஈசா வாஸ்ய உபநிஷத் சொல்றது. அதைத்தான் நீங்களும் பேசினீங்க.''

இதுதான் ரமணரின் தன்மை.

ஞானம் யாருக்கு வரும்? எப்போது வரும்? எப்படி வரும்? என்றெல்லாம் நிர்ண யிக்க முடியாது. அப்படித்தான், பதினாறு வயதில் திருவண்ணாமலை அவரை ஈர்த்தது.

சுற்றுலா செல்லும் வயதில், தன்னைத் தேடிப் பயணித்தான் வெங்கட்ராமன் என்ற அந்தச் சிறுவன். திருவண்ணாமலையில் உள்ள விருபாட்சர் குகையிலும், பவழக் குன்றிலுமாக தன்னுள் லயித்துக் கிடந்தான். இந்த உடல் வேறு; ஆத்மா வேறு என்கிற உண்மையை அனுபவமாக்கிக்கொண்ட நிலையில், ரமணராக வெளிப்பட்டார்.

அருள் வீசும் அவரது பார்வை பட்ட மாத்திரத்தில், பலரின் வாழ்வே மாறியிருக் கிறது.

பகவான் ரமணரின் தத்துவங்கள் என்று விவரித்துக்கொண்டே செல்ல வேண்டியதில்லை. 'நான் யார்?' இந்த ஒரே கேள்வியில் எல்லாவற்றையும் தெளிவு படுத்தியவர் ரமணர். இந்தக் கேள்வியை

# ரமண தீபம்!



வெளியே கேட்டால், வேலை, உறவு கள்... இவை தொடர்பான பதில்கள் தான் வரும். உள்ளேயே கேட்டுக் கொண்டால்... முதலில் குழப்பம் வரும்; பிறகு தெளிவு வரும்; அதன்பிறகு ஞானம் வரும்!

இதே விஷயத்தைத்தான் திருமூலரும் சொல்லியிருக்கிறார். ''தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை.'' பகவானின் வார்த்தையில் சொன்னால், ''நான் யார்?'' கேட்டுப் பார்ப்போமா - நமக்குள்?

– ராகவன்

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? சிவசங்கர் மேனனுடைய இலங்கைப் பயணத்தின் உண்மையான நோக்கம் போர் நிறுத்தம்தானா?

! ஊஹூம்! தமிழ்நாட்டு புலிகள் ஆதரவு கட்சியினருக்காகவும், அவர்களிடம் சிக்கித் தவிக்கும் கலைஞருக்காகவும் ஓர் உளவாகட்டி நாடகம்.


கனவு தரும் கவலை!

● அ.கஹைறல் ரஹ்மான், திருச்சி-21

? ''திருமங்கலம் தொகுதியில் கிடைத்த வெற்றி வருங்காலத்திலும் தொடரும்'' என்று ஸ்டாலின் அறிக்கை வெளியிட்டுள்ளாரே?


தொடரும் கோடிகள்

! ஒரு இடைத் தேர்தலுக்கே இத்தனை கோடி என்றால், நாடாளுமன்றப் பொதுத் தேர்தலுக்கு எத்தனை கோடி? கழகப் பொருளாளர் கணக்குப் போடாமல் பேசியிருக்க மாட்டார். கழகத்தின் நிதி நிலைமை இப்படி எனில், அது எப்படி உருவாயிற்று? சிந்தியுங்கள்.


ஆதரவு கர்ஜனை!

● பி.என்.ஜெய்குமார், திருவாரூர்

? ''தீவிரவாதிகளுக்குப் பதிலடி கொடுக்கும் வகையில் இந்தியாவில் வெளிநாட்டு இந்தியர்கள் முதலீடு செய்ய வேண்டும்'' என ஜனாதிபதி பிரதிபா பாட்டில் அழைப்பு விடுத்துள்ளாரே!

! தைரியமாக வந்து முதலீடு செய்யும் வகையில், அமைதியான சூழ்நிலையை முதலில் நாம்தான் அமைத்துத் தர வேண்டும். தீவிரவாதத்துக்குப் பதிலடி கொடுக்க வேண்டியது அரசின் கடமையே தவிர, முதலீட்டாளர்களின் பொறுப்பல்ல.

● இரா.சாந்தகுமார், சென்னை - 49

? நோய்கள் தங்கள் கிராமத்தில் பரவாமல் இருக்க இரண்டு சிறுமிகளுக்குத் தவளைகளைத் திருமணம் செய்து

# தேர்தல் உடன்பாட்டின் அளவுகோல் என்ன?

வோமோ என நினைப்பது வீண் கவலை!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

? தமிழக அரசு ஊழியர்களுக்கு ரூ. 4247 கோடி, ஆறாவது ஊதியக் குழு பரிந்துரைபடி, நிலுவைத் தொகை வழங்க முன்வந்துள்ளதே அரசு?

! உங்கள் கேள்விக்குப் பதில் சொல்ல முற்படும்போது, சீர்காழி ராஜதுரை வேறொரு கேள்வி எழுப்பியுள்ளார். அதைப் படியுங்கள்:

● ஆர். ராஜதுரை, சீர்காழி. ❑



★ நாடகப் பயணம்



★ பதிலடி கோரிக்கை!

? அன்றாடம் உழைத்து கூலி பெற்று வரும் ஏழைகளுக்கு, மூன்று மாதச் சம்பளத்தை இலவசமாக யார் கொடுப்பார்கள்?!

● சி.கார்த்திகேயன், சாத்தூர்.

? ஆஸி. கிரிக்கெட் அணி தனது முதல் இடத்தை இழக்க வேண்டும் என்று பல நாடுகள் ஆசைப்படுகின்றனவே?

! உச்சத்தில் இருப்பவன் சறுக்கி விழ வேண்டும் என எதிர்பார்ப்பது அல்ல சுகம். நாம் உச்சத்தை அடைய வேண்டும் என்று விரும்பி உழைப்பது ஆரோக்கிய சுகம்.

● ரா. பிரசன்னா, மதுரை.

? "புலிகளை நான் என்றும் ஆதரிப்பேன்" என்று வைகோ கூறியுள்ளாரே?

! இங்கிருந்து கொண்டே மார்தட்டுவதை விட முல்லைத் தீவுக்குப் போய் முயன்று பார்க்கலாமே!

● குலசை நஜ்முத்தீன், காயல்பட்டினம்.

? அரசியல் ஆதா

வைத்துள்ளனரே?

! நமது கல்வித் திட்டம் சரியானதாக அமைந்தால், இத்தகைய மூட நம்பிக்கைகளும் பரவமாட்டா; அதற்குக் காரணமான நோய்களும் பரவமாட்டா!

● சி. இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி.

? திருமங்கலம் தேர்தல் முடிவால் ஜெயலலிதாவின் பிரதமர் கனவு கலைந்தது என்கிறாரே முதல்வர்?

! 'ஜெ'யின் முதல்வர் கனவு இன்னும் கலையலையே என்று கவலைப்படறாரு. அதனால்தான் ஆட்சியைக் கலைக்கச் சதி நடக்குதுன்னு ஆரம்பிச்சிருக்காரு.

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? எது கவலை? எது வீண் கவலை?

! 'தவறு செய்துவிட்டோமே?' என நினைப்பது கவலை. தொடர்ந்து தவறாகச் செய்துவிடு

★ நிரந்தர இடம்

யம் என்றால் என்ன?

! மாறன் சகோதரர்களை அரவணைத்தது குடும்ப ஆதாயம்; அதனால் தினகரன் மற்றும் சன் டீ.வி.யில் எதிர்க்கட்சிகளின் பிரசாரம் ஒடுங்கியது அரசியல் ஆதாயம்!

● ஜோ முருகானந்தம், திருவைகாவூர்

? ''நினைத்தவுடன் பிரணாப் முகர்ஜியை இலங்கைக்கு அனுப்ப முடியாது'' என மத்திய அமைச்சர் டி.ஆர். பாலு சொல்கிறாரே?

! இவரானா இப்படிப் பேசறாரு! இவர் தலைவரோ, முகர்ஜியை அனுப்பாததற்கு அதிருப்தி தெரிவிக்கிறாரு! மொத்தத்துல, எல்லா கட்சியினருமா சேர்ந்து குட்டையைக் குழப்பறாங்களே தவிர, இதுவரை உருப்படியா எதையும் சாதிக்கலை.

● என்.சண்முகம், கொங்கணாபுரம்.


★ குழப்பும் குட்டை!


★ புதிய கிரீடம்!

? மு.க. அழகிரி தென் மண்டல தி.மு.க. அமைப்புச் செயலாளராகத் தேர்வு செய்யப்பட்டுள்ளாரே?

! அமைதிச் செயலாளரா விளங்கட்டும்.

● ஜெ. கண்ணன், சென்னை-101.

? ''நான் ஆடுவதை நானே பார்ப்பது போல் இருக்கிறது'' என்று சச்சினுக்குப் புகழாரம் சூட்டினார் பிராட்மேன். ஆனால், ஐ.சி.சி.யின் சிறந்த டெஸ்ட் வீரர்கள் பட்டியலில் இன்று சச்சினுக்குச் சிறப்பிடம் இல்லையே?

! பட்டியல் அவ்வப்போது புதுப்பிக்கப்படுவது. அதில் பழையன கழிதலும் புதியன புகுதலும் இருக்கும். இதனால் சச்சினின் சாதனை சரித்திரத்துக்கு எவ்வித மாசும் இல்லை. பட்டியலில் இடம் மாறினாலும் ரசிகர்கள் இதயங்களில், மாறாத இடம் பெற்றவர் சச்சின்.

● வானவில் மூர்த்தி, கூத்தப்பாக்கம். ★

? சென்ற வாரம் டாக்டர் ராமதாஸ் பேட்டியில், ''கடந்த நாற்பது வருடங்களில் அமைந்த கூட்டணிகள் எதுவும் கொள்கை அடிப்படையில் அமையவில்லை; தேர்தல் உடன்பாடுதான்'' என்று கூறியுள்ளாரே? தேர்தல் உடன்பாட்டின் அளவுகோல் கூறவில்லையே?

! பதவிக்கு வருவது என்பதுதான்! அதனால் பெறக்கூடிய ஆதாயங்கள் தான்!

●

☐ ரூ. 100 பரிசு பெறுபவர்:
ஆர். ராஜதுரை, சீர்காழி.

★ ரூ. 50 பரிசு பெறுபவர்:
வானவில் மூர்த்தி, கூத்தப்பாக்கம்.

# கண்ணுக்கு 'மை' ஆபத்தா?

'கண்ணுக்கு மை அழகு; கவிதைக்குப் பொய் அழகு'. ஆனால், பொய்யைப் போலவே மையையும் கவனமாக ஆராய்ந்து நமக்கு சூட் ஆகுதான்னு பார்க்கணும்! - இப்படி எச்சரிப்பவர் சென்னை, மேற்கு மாம்பலத்தில் 'Sri Eye Clinic' நடத்திவரும் டாக்டர் வி.எஸ்.வேங்கடராகவன்.

*அப்படியானால் கண்ணுக்கு 'மை' ஆபத்தா?*

''நல்ல தரமான மையைப் பயன்படுத்து வதில் எந்த ஆபத்தும் இல்லை. தரக் குறைவான மை, கண் எரிச்சல், கண் சிவப் பாகுதல் போன்ற விளைவுகளை உண்டாக் கும். அதுபோன்ற அறிகுறிகள் தெரிந்தால் உடனடியாக நிறுத்தி விடுங்கள். மை டப்பியை தூசு படாமல் மூடி வையுங்கள்.''

*கண்களுக்கு விளக்கெண்ணெய் விடுவது நல்லதா?*

''எந்த ஒரு வெளிப் பொருளையும் கண்களில் இடுவது நல்லதல்ல. ஏனெனில் கண் மிக மென்மையான உறுப்பு. தேவைப் பட்டால் நல்ல தரமான மருந்துகளை மருத்துவரே பரிந்துரை செய்வார். அத னைப் பயன்படுத்தலாம்.''

*கண்களை உடனடியாகப் பாதிக்கும் விஷயங்கள் என்ன?*

''தூசு, புகை போன்றவை. குறிப்பாக ரயில் பயணத்தில் ஜன்னலோர இருக்கை யில் செல்பவர்கள் கவனமாக இருக்க வேண்டும். தண்டவாளத்தில் இருந்து கிளம்பும் மெல்லிய இரும்புத் துகள், கண்களைத் தாக்கலாம். அதேபோல் இரு சக்கர வாகனத்தில் செல்லும்போது கண் ணாடி அணிவது நல்லது. கணிப்பொறி யைத் தொடர்ந்து பயன்படுத்துபவர்கள் நாற்பது முதல் ஐம்பது நிமிடங்களுக்கு



ஒருமுறை பத்து நிமிடங்களாவது பார்வையைத் திருப்பி ஓய்வெடுக்க வேண்டும். கண்களை அடிக்கடி இமைக்க வேண்டும்.''

**மாறு கண்ணைக் குணப்படுத்த முடியுமா?**

''நிச்சயமாக முடியும். இந்தக் குறைபாடு உள்ள குழந்தைகளைச் சரியாகக் கவனித்து நான்கு அல்லது ஐந்து வயதுக்குள் மருத்துவரிடம் அழைத்துச் செல்ல வேண்டும். அவர்களுக்குப் பார்வைக் கோளாறு இருக்கலாம். கிட்டப்பார்வை, தூரப்பார்வை, சிலிண்டர் பவர் போன்ற பரிசோதனை செய்து குணப்படுத்துவர். அதிக பட்சம் ஏழு அல்லது எட்டு வயதுக்குள்ளாவது கவனிக்கப்பட வேண்டும். அந்த வயதையும் கடந்தால் பிறகு குணப்படுத்த முடியாது. ஒரு சில குழந்தைகளுக்கு, கண்ணாடியைத் தவிர அறுவை சிகிச்சை தேவைப்படலாம். மாறு கண்ணை அதிர்ஷ்டம் என நினைத்து விட்டுவிடாமல் பரிசோதனை செய்வது அவசியம்.''

**கண்ணாடி அணிபவர்கள் தொடர்ந்து அணிய வேண்டுமா?**

''நிச்சயமாக. நம் கண்களுக்குக் கிடைக்க வேண்டிய ஒரு பிம்பம் முழுமையாக, தெளிவாகக் கிடைக்கத்தான் கண்ணாடி அணிகிறோம். கண்ணில் பவர் இருக்கும்போது, கண்ணாடி இல்லாமல் பணிகளை மேற்கொண்டால் கண்ணின் தசைகள் சோர்ந்துவிடும். இதனால் கண் வலி, தலைவலி, கண்ணில் நீர் வடிதல் போன்றவற்றால் பணியில் கவனம் செலுத்த முடியாது. இதைத் தவிர்க்க வருடத்துக்கு ஒருமுறை கண் மருத்துவரிடம் பரி சோதித்து, தகுந்த ஆலோசனையைப் பெறவேண்டும்.''



* வி.எஸ்.வேங்கட ராகவன்

**கண்ணாடி அணிந்த பிறகு பார்வைக் குறைபாடு நின்றுவிடுமா?**

''அப்படிக் கிடையாது. சிலருக்குக் குறையலாம். சிலருக்குக் கூடும். இது தெரியாமல் சிலர் நேரடியாகக் கடைக்குச் சென்று கண்ணாடியை அவர்களாகவே மாற்றிக் கொள்வர். அது தவறு. ஏனெனில் கண் மருத்துவரால்தான் ஒருவரின் கண்களை முழுமையாகப் பரிசோதிக்க முடியும். கண்ணின் பார்வை தவிர, கண் நீர் அழுத்தம், கண் நரம்புப் பரிசோதனை போன்ற முக்கியமான விஷயங்களைக் கவனித்து அதற்கேற்ப மாற்றுக் கண்ணாடியை அளிப்பார்.''

**கண் நீர் அழுத்த நோய் (GLAUCOMA) என்றால் என்ன?**

''கண்களில் உள்ள நீரின் அழுத்தத்தை, கண் நரம்பு தாங்க முடியாமல் போவதால் ஏற்படக் கூடிய பாதிப்பே கண்நீர் அழுத்த நோய் (GLAUCOMA) என்கிறோம். இது ஓர் அமைதியான நோய். தொண்ணூறு சதவிகிதப் பாதிப்பு ஏற்படும் வரை தெரியாது. பெரும்பாலும் நாற்பது வயதுக்கு மேல் உண்டாகும். இதைக் கண்டு பயப்படத் தேவையில்லை. இந்த நோய்க்கு அதிநவீன மருந்துகள் உள்ளன. இருந்தாலும் வரும் முன் காப்பதே சிறந்தது. ஆகவே, நாற்பது வயதுக்கு மேற்பட்டோர் ஆண்டுக்கு ஒருமுறை தவறாமல் கண் பரிசோதனை செய்துகொள்வது நல்லது.''

- யுவராஜ்

**சின்னச் சின்ன சந்தேகம்!**

சமீபத்தில் லலித் கலா அகாடமியில் பிரதிக்ஷா அபுர்வ்வின் ஓவியக் கண்காட்சி நடந்தது.

பிரதிக்ஷா அபுர்வ் - ஓவியக் கலைஞர் மட்டுமல்ல. ஃபேஷன் டிசைனரும்கூட. அதை விட சிறப்பு அவர் ஓஷோ சிந்தனைகளின் சிஷ்யை. ஓவியக் கலையை வியாபாரமாக, அலங்காரமாக, பொழுதுபோக்காக இல்லாமல், ஆன்ம விசாரணைக்கான கருவியாகவும் மாற்ற முயற்சிக்கிறார். தமது படைப்புகளை பௌத் தம் மற்றும் வைணவ சித்தாந்தங்களின் பேரன்பின் கலவையாகவும், தியான வெளிப் பாடாகவும் மாற்றுகிறார். அது காண்பவர் களின் அகமனத்தின் ஆழம் நோக்கி ஊடுருவு

# ஒடிஸி!

கிறது! ''தன் கபடமற்ற அழகால் இயற்கை நம்மை வசீகரித்துக் கொண்டேயிருக்கிறது. நமக்குத் தேவை திறந்த மனமும் தடைகளற்ற வாழ்வும்தான். அதைத் தியானத்தால் மட்டுமே அடைய முடியும்'' என்கிற பிரதிக்ஷா அபுர்வ் வின் வண்ணங்கள், முற்றிலும் வேறொரு ஆன்மிகப் பிரதேசத்து அனுபவங்கள். சுயத் தேடலுக்கான பாதையை ஆற்றுப்படுத்தக் கூடிய அம்சங்கள். அவரது தூரிகை வெல்லட் டும்!

- அமிர்தா



நம்பிக்கை



தேடல்



பிரதிக்ஷா அபுர்வ்

# பதிப்பாளர்கள் பார்வைக்கு

**சென்னை புத்தகத் திருவிழா கோலாகலமாக நடந்துமுடிந்துள்ளது. பத்து நாட்களில் மொத்தம் பத்து லட்சம் பேர் வந்திருந்தார்கள் என்றும், ஏழு கோடி ரூபாய்க்குப் புத்தக விற்பனை நடந்ததாகவும் கணக்குச் சொல்கிறார்கள். மொத்தத்தில் பதிப்பாளர்களுக்கு பம்பர் அறுவடை. ஆனால், எழுத்தாளர்களுக்கு ராயல்டி? இதோ ஒரு கள ஆய்வு.**



ஒரு பெண் எழுத்தாளர், மேற்கொண்ட பெண் சிசுக் கொலை குறித்த ஆராய்ச்சியை ஆய்வுக்கட்டுரையாக வழங்கினார். ஒரு

**எழுத்தாளர்களுக்கு 10 சதவிகிதம் ராயல்டி தருவது உலக மரபு. இங்கு 7.5 சதவிகிதம் மட்டுமே தரப்படுகிறது!**

பதிப்பகம் அதைப் புத்தகமாக வெளியிட்டது. புத்தகம் வெளியான ஓராண்டுக்குப் பிறகும், ராயல்டி வரவில்லையாம். யதேச்சையாக, அந்த எழுத்தாளர் மதுரை பக்கம் சென்றிருந்தபோது அங்கே ஒரு புத்தகக் கடையில் தமது புத்தகத்தின் இரண்டாம் பதிப்பினைக் கண்டார். பதிப்பாளரிடம் கேட்க 'அந்தப் புத்தகத்துக்கு அரசாங்க நூலகங்களுக்கு சப்ளை செய்வதற்குக்கூட இன்னும் ஆர்டர் வரவில்லை. எனவே, ராயல்டி அளிப்பது சாத்தியமில்லை' என்று பதில் வந்தது.

ஓர் எழுத்தாளர் பிரபல நடிகரது வாழ்க்கை அனுபவங்களை எழுதிட, அது ஒரு பிரபலப் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது. முதல்பதிப்பு வெளியாகி முழுவதுமாக விற்றுத் தீர்ந்த பிறகு, பதிப்பகத்தை நடத்தும் அப்பா, 'இரண்டாம் பதிப்பு 800 பிரதிகள்தான் போட்டிருக்கிறது' என்று சொல்ல எழுத்தாளரும் சரி என்று சொல்லிவிட்டார். ஆனால், ராயல்டி அனுப்பும்போது பதிப்பக பார்ட்னரான மகன், 500 பிரதிகளே அச்சிட்டதாகச் சொல்லி, அதற்குரிய ராயல்டியைக் கணக்கிட்டுக் கொடுத்திருக்கிறார்.

இன்றைய முன்னணிக் கவிஞர் ஒருவருக்கு, தம் கவிதைப் புத்தகங்களை வெளியிடும் பதிப்பகத்தார் தரும் கணக்கு வழக்குகள் சரியில்லை என்று சந்தேகம். அதிரடியாக சென்னை மாநகர போலீஸ் கமிஷனரை அணுகி புகார் கொடுக்க, பதிப்பகத்தில் தடாலடியாக ரெய்டு நடத்தப்பட்டபோது, ஏகப்பட்ட தில்லு முல்லுகள் வெளிச்சத்துக்கு வந்தன.

பழைமையான பதிப்பகம் ஒன்று. ஓர்




கோபமடைந்த எழுத்தாளர், தனக்குச் சேரவேண்டிய ராயல்டி பணத்தை ஒழுங்காகக் கணக்கிட்டுத் தராவிட்டால், சட்டபூர்வமான நடவடிக்கை எடுக்க நேரிடும் என்று எச்சரிக்க, ஒரே வாரத்தில் அந்த எழுத்தாளருக்குப் பதினேழாயிரம் ரூபாய்க்கு செக் வந்து சேர்ந்தது.

பெரிய தலைகள் என்றால் ஒழுங்காக ராயல்டி கொடுத்துவிடும் பதிப்பாளர்களிடம் புது எழுத்தாளர்கள் படும் அவமானங்களும், ஏமாற்றங்களும் ஏராளம். ஆங்கிலப் புத்தகங்களை மொழிபெயர்க்க, பலரும் முறைப்படி அனுமதி பெறுவதில்லை. அப்படியே அனுமதி பெற்றாலும், ஒரிஜினல் புத்தகத்தின் ஆசிரியருக்கு ஒழுங்காக ராயல்டியும் தருவதில்லை.

இன்னொரு வகை பதிப்பாளர்களும் உண்டு. எழுத்தாளரிடமே இத்தனை ஆயிரம் என்று புத்தகச் செலவை

# எழுத்தாளர்களை ஏமாற்றலாமா?

எழுத்தாளரின் ஏராளமான நூல்களை வெளியிட்டது. எழுத்தாளர் தமக்கு எப்போது செலவுக்குப் பணம் தேவையோ அப்போது பதிப்பாளரிடம் கேட்டு வாங்கிக் கொள்வார். ஒருமுறை வீட்டில் கல்யாணச் செலவுக்காக, பதிப்பாளரிடம் பணம் கேட்டபோது, மூவாயிரம் ரூபாயை எடுத்துக் கொடுத்தார். ''பத்தாயிரம் ரூபாயாவது தரக்கூடாதா?'' என்று எழுத்தாளர் கேட்க, ''கணக்குப் பார்த்தால் நீங்கள்தான் எனக்கு நாற்பதாயிரம் ரூபாய் தரவேண்டும்'' என்று கூறிவிட்டார்.

முன்னதாக வாங்கிக்கொண்டு விடுவர். புத்தகத்தை வெளியிட்டு, எழுத்தாளர் கொடுத்த பணத்துக்கு ஈடான தொகைக்குப் புத்தகத்தின் பிரதிகளையே வழங்கி விடுகிறார்கள்.

ஆங்கில நூல்களைத் தழுவி தமிழ்ப் புத்தகங்கள் எழுதப்பட்டது போய், இன்று தமிழ்ப் புத்தகங்களையே 'தர்ஜுமா' செய்து தங்கள் பெயரில் வெளியிடும் 'காப்பி' 'ரைட்'டைக் கச்சிதப்படுத்தி வருகிறார்கள் ஒரு படையினர்!

எழுத்தாளருக்கு 10 சதவிகிதம் ராயல்டி

**பதிப்பாளர்கள், எழுத்தாளர்களை ஏமாற்றுகிறார்களா? பதில் சொல் கிறார் கிழக்கு பதிப்பகத்தின் பத்ரி சேஷாத்ரி :**

''ஒரு புத்தகத்தைப் பதிப்பிக்கும் போது பதிப்பாளரும், எழுத்தாளரும் ஒப்பந்தம் செய்துகொள்வது என்பது இங்கே பெரும்பாலும் நடைமுறையில் இல்லை. அதுவே பல பிரச்னைகளுக்கு முக்கிய காரணம்.

எங்கள் பதிப்பகத்தில் எழுத்தாளர்களுடன் எழுத்துபூர்வமான ஒப்பந்தம் செய்துகொண்டுதான் புத்தகங்களை வெளியிடுகிறோம். ஆண்டுதோறும், ஒவ்வோர் எழுத்தாளருக்கும் அவரது புத்தகங்கள் எத்தனை பிரதிகள் விற்றன, அதற்கான ராயல்டி எவ்வளவு? என்று ஸ்டேட்மென்ட்டும், அதைத் தொடர்ந்து செக்கும் அனுப்புகிறோம்'' என்கிறார்.



* காந்தி கண்ணதாசன்

தென்னிந்திய பதிப்பாளர்கள் மற்றும் புத்தக விற்பனையாளர்கள் சங்கத்தின் தலைவரான காந்தி கண்ணதாசன், ''முந்தைய தலைமுறை பதிப்பாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் பரஸ்பரம் நம்பிக்கையும், நல்லுறவும் நிலவின. அந்த மாதிரியான உறவு இப்போது இல்லை. அதனால்தான் முந்தைய தலைமுறை எழுத்தாளர்களின் எழுத்துகளை அரசாங்கம் நாட்டுடமை ஆக்கும்போது, அவர்களது வாரிசுகள் கணிசமாக ஒரு தொகையை வாங்கிக்கொண்டு மகிழ்ச்சியுடன் ஒப்புதல் அளிக்கிறார்கள். ஒரு புத்தகம், பல்கலைக்கழகத்தில் பாடப் புத்தகமாக வைக்கப்படும்போது, அதைப் பல பதிப்பாளர்கள் எழுத்தாளர்களுக்குச் சொல்லாமல் மறைப்பதும், அதற்குரிய ராயல்டியைத் தராமல் இருக்கும் தவறும் இங்கே நடக்கிறது. எழுத்தாளர்கள் இல்லாது போனால், பதிப்பாளர்கள் இல்லை. ஆனாலும், அவர்களுக்கு ஒரு பத்து சதவிகிதம் ராயல்டி தராமல், பதிப்பாளர்கள் ஏமாற்றுவதை ஒருக்காலும் ஏற்றுக்கொள்ளமுடியாது.

இன்னொரு பக்கம் புத்தகங்களுக்கு நூலக ஆர்டர் வாங்கவே பதிப்பாளர்கள் பெரும்பாடுபட வேண்டியிருக்கிறது. இதை எழுத்தாளர்களும் புரிந்துகொள்ள வேண்டும்'' என்கிறார்.

* பத்ரி சேஷாத்ரி

தருவது என்பது உலகளாவிய மரபு. ஆனால், நம் ஊரில் சில பதிப்பாளர்கள் 7.சதவிகிதம்தான் ராயல்டி தருகிறார்கள். இன்னும் சிலரோ மூவாயிரம், ஐந்தாயிரம் என்று ஒட்டுமொத்தமாக ஒரு ரேட் பேசி வாங்கி எத்தனை பதிப்புகளை வேண்டுமானாலும் வெளியிட்டுக் கொள்கிறார்கள். இதே பதிப்பாளர்கள், தமிழ்நாடு அரசு பொதுநூலகங்களுக்கு வாங்கும் புத்தகங்களுக்கு மிகக் குறைவாக விலை நிர்ணயிக்கும் முறையைக் கண்டிப்பதும், அந்த ரேட்டை உயர்த்தக் கடுமையாகப் பாடுபடுவதும் விசித்திரமில்லையா?

எல்லாவற்றுக்கும் பாதைபோட்டுக் கொடுப்பது தம் எழுத்து புத்தக வடிவம் பெற வேண்டும் என்ற ஆசைதான்! இந்த ஆசையில் எழுத்தாளர்கள் ஒன்றுபட்டால் பதிப்பாளர்கள் தங்களை வஞ்சிக்காமல் பார்த்துக் கொள்ளலாம். ஆனால், அந்த ஒற்றுமையை எந்த ஃபேரில் போய் வாங்க?

**- கல்கி ஆய்வு டீம்**

**'ப**தவி... பதவி'... காதல் ரசம் ததும்பும் சிறுகதை. நெகிழ்ச்சியாய் இருந்தது. - **கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி - 2** ● கோல்டன் குளோபல் விருது பெற்ற ரஹ்மானை அட்டைப் படத்தில் வெளியிட்டு கௌரவப்படுத்திய 'கல்கி'க்குப் பாராட்டுகள். - **என்.பாலகிருஷ்ணன், மதுரை** ● என் செல்லமே பேட்டி + செய்திகள் சூப்பர் என்றால், அதற்கான படங்களோ, டபுள் சூப்பர்.- **அ.முரளிதரன், மதுரை - 3** ● திருமங்கலம் இடைத்தேர்தலில் பணபலம், அதிகாரபலம், அடியாள் பலம் இம்மூன்றையும் வைத்துக்கொண்டு

# வட்டமேஜை

'சத்யம் கம்ப்யூட்டர்ஸ் வீழ்ந்தாலும் சத்யம் தழைக்கட்டும்' என்ற கூற்று அர்த்தமுள்ளது! - **பா.அச்சுதன், வயலூர்** ● மறைந்த எழுத்தாளர் கு.அழகிரிசாமியின் அன்பளிப்பு சிறுகதை தொகுப்புக்கு அமரர் கல்கியின் மதிப்புரையை மீண்டும் மீண்டும் படிக்கலாம்! - **அ.அப்துல் காதர், சென்னை - 45** ● வட்டமேஜை பகுதியில் வெளியான ஒன்பது கடிதங்களில் ஆறு கடிதங்களை 'சென்னை'க்கே ஒதுக்கியது ஏன்? - **ஆரூர்.பாலநாதன், திருவாரூர்** ● பல வாரங்களாக மருத்துவம் சார்ந்த பல சந்தே

# கல்கி ஒரு SKC!

ஆளுங்கட்சி நாற்பதாயிரம் வோட்டு வித்தியாசத்தில் ஜெயித்தது ஒன்றும் ஆச்சரியம் இல்லை. - **எம்.ராஜேந்திரன், லால்குடி** ● 'காதல்னா சும்மா இல்லை- சொதப்பல்' என்று, தலைப்பை வைத்தே விமர்சித்த விதம் அசத்தல்! - **த.சத்திய நாராயணன், அயன்புரம்** ● ராகுல்ஜியின் 'வால்காவிலிருந்து கங்கை வரை' புத்தகத்தை அற்புதமாக மறுபடியும் அறிமுகப்படுத்திவிட்டீர்கள். - **கே.வி.ராமன், சென்னை - 73** ● அம்பாளின் தாம்பூலப் பிரசாதத்தால் உண்டாகும் நலன்களை அழகாக விவரித்துள்ளார் சுதா சேஷய்யன். - **கோதை பத்மனாபன், சென்னை - 88** ● தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளாத ஆர்.சூடாமணியின் தன்னடக்கம் பின்பற்றத்தக்கது! - **கௌசல்யா ராகவன், சென்னை - 44** ● கல்கியைப் படிக்கிறபோது 'SKC' சாப்பிட்ட திருப்தி ஏற்பட்டது! S-sweet (ஸ்வீட்) K-karam (காரம்) C-coffee (காஃபி) ஹி... ஹி...! - **ஆர்.ராம் சுப்ரமணி, திருவாரூர்** ● தலையங்கத்தில்

கங்களைத் தெளிவுபடுத்திய 'ஹாஸ்பிடல் எத்திக்ஸ்' தொடருக்கு, அதற்குள் ஏன் முற்றும்? - **பி.என்.ஜெயக்குமார், திருவாரூர்-2** ● வீரத்துறவி சுவாமி விவேகானந்தரின் மந்திரச் சொல் படித்தபோது மனத்துக்குள் இனம்புரியாத வெளிச்சம். - **இராம.வாணி, திருவாரூர்**



'டாஸ்மாக் கடைகளை மூட வேண்டும்' என்ற பா.ம.க. குரல் அரசியல் வட்டாரத்தில் ஓங்கி ஒலிக்கும் இக்கால கட்டத்தில், கள் இறக்க அனுமதி உண்டு என்ற அபஸ்வரமும் கேட்கத் துவங்கிவிட்டது. தூரதிர்ஷ்டவசமாகச் சில கட்சிகளும் இதை ஆதரிக்கின்றன. அதில் பா.ஜ.க.வும் ஒன்று. ''ஆர்.எஸ்.எஸ்.ஸின் கொள்கையே பூரண மதுவிலக்கு என்று இருக்க, கள் இறக்கும் கோரிக்கைக்கு எப்படி ஆதாவு தரலாம்?'' என்று பா.ஜ.க.வின் தமிழக தலைவர் இல.கணேசனைக் கேட்டோம்.

*''கள் இறக்க எங்கள் ஆதரவைத் தெரிவிப்பது விவசாயிகளின் நலன் கருதித்தான். தமிழகத்தில் உள்ள தென்னை விவசாயிகளைவிட கேரளத் தென்னை விவசாயிகள், கள் இறக்குவதன் மூலம் ஆறு மடங்கு அதிக வருவாய் பார்க்கிறார்கள். மேலும், தமிழகத்தில் டாஸ்மாக் கடைகளில் குடித்துக் கெட்டுப் போகிறவர்கள் பெரும்பாலும் விவசாயிகளே! கள் இறக்க அனுமதி கொடுத்தால் அவர்கள் டாஸ்மாக் கடைக்குப் போகும் வாய்ப்பு குறையும்.*

*தமிழகத்தில் 50 லட்ச விவசாயக் குடும்பங்களில் சுமார் 10 லட்சம் தொழிலாளர்கள் தென்னை, பனை மர விவசாயத்தை நம்பி இருக்கிறார்கள். கள் இறக்க அனுமதி கொடுத்தால் அவர்கள் பொருளாதாரம் மேம்படும்.*

*நான் இப்படிச் சொல்வதால் மது விலக்குக்கு எதிரி என்று நினைக்க வேண்டாம். பூரண மதுவிலக்கே எங்கள் குறிக்கோள். ஆனால் தீவிரக் கெடுதல் விளைவிக்கும் டாஸ்மாக் கடையை மட்டும் திறந்துவிட்டு, கள்ளுக்குத் தடை போடுவது எப்படிச் சரியாகும்? டாஸ்மாக் கடையை இழுத்துப் பூட்டுங்கள்.*



"கள்ளை

டாஸ்மாக்கும் வேண்டாம்; கள்ளும் வேண்டாம். கள்ளில் ஆபத்துண்டு என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் பெப்சியிலும் கோக்கிலும் அதைவிட ஆபத்து உள்ளதாக விஞ்ஞானம் சொல்கிறது. மலேசியா, தாய்லாந்து போன்ற நாடுகளில் கள்ளை அழகான பேக்கிங்கில் விற்கிறார்கள். நமது விவசாயிகளும் அதை உணவுப் பொருளாகக் கருத வேண்டும் என்கிறார்கள்.''




**தேசியக் கட்சியான நீங்கள் கோரிக்கைக்கு ஆதரவு தெரிவிக்க, 'கள் இறக்க அனுமதி கூடாது' என்று உண்ணாவிரதம் இருந்திருக்கிறாரே தங்கபாலு?**

''கள்ளைவிட மிகவும் தீமையாக டாஸ்மாக் கடைகள் இருக்கின்றன. இந்தக் கடைகளை மூட வேண்டும் என்று தங்கபாலு இதுவரை உண்ணாவிரதம் இருந்திருக்கிறாரா? இது ஏன்? காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் மதுக் கடைகள் திறந்து வைக்கப்பட்டிருக்கின்றனவே. அங்கே போய் உண்ணாவிரதம் இருப்பாரா? காந்தியை மறந்த காங்கிரஸ், இந்த விஷயத்தில் சிலிர்த்தெழுவது சரியான இரட்டை வேடம். மாறாக நாங்கள் டாஸ்மாக் கடைகளின் முன் மறியல் செய்து பூரண மதுவிலக்குக்குப் போராடி வருகிறோம்.

குஜராத்தில் பூரண மதுவிலக்கு இருக்கிறது. ஆனால் இங்கே 'சுற்றிலும் தீப்பிடித்து எரிய தமிழகத்தில் மட்டும் மதுவிலக்கு சாத்யமா?' என்று வசனம் பேசுகிறார்கள்.

மதுவிலக்குக்கு ஆதரவாக நாங்கள் தொடர்ந்து பிரசாரம் செய்கிறோம். கள் விவகாரத்தில் ஆதரவு தெரிவிப்பது முழுக்க முழுக்க விவசாயிகளின் நலன் கருதியே. இந்த நிலையில் தமிழக அரசு பதநீருக்கு அதிகக் கொள்முதல் விலை கொடுத்திருப்பதை வரவேற்கிறேன்'' என்கிறார் இல.கணேசன்.

மூட்டைப் பூச்சிக்காக வீட்டைக் கொளுத்தலாமா? தென்னை விவசாயிகள் மேன்மையுற வேறு யோசனையே இல்லையா!

- கௌசி

# ஆதரிக்கிறோம்!"

## —இல.கணேசன் பகீர்!



# படிக்காதவன்

ஒரு வீட்டில் எல்லோரும் படித்திருக்க, ஒருத்தன் மட்டும் படிக்கலைன்னா, அவன் என்ன பண்ணுவானோ அதைத்தான் படிக்காதவன் படத்துல தனுஷ் பண்ணியிருக்கார். தனுஷின் ப்ளஸ் பாய்ண்டே பக்கத்து வீட்டுப் பையன் போன்ற தோற்றம்தான். அதற்காக கதையில் கவனம் செலுத்தாமல் போனால் காலைவாரிவிடும் என்பது அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

அதெப்படி டைரக்டர் ஸார், பத்தாவது பாஸ் பண்ணாத ஒருத்தனை நம்பி, ஐ.ஐ.டி. ஸ்டூடண்டை லவ் பண்ண வெச்சீங்க. உங்களுக்கு ரொம்பதான் தைரியம்!

எத்தனை வில்லன் எத்தனை அடியாட்கள். ஏன் ஸார் இப்படி? அசந்தால் பக்கத்து வீட்டில் உட்கார்ந்து படம் பார்த்துக் கொண்டிருப்பவரும் வில்லனா இருப்பாரோ என்று சந்தேகம் வருகிறது.

தமன்னா ஹீரோயின். படத்தில் அவரை நடிக்க விடவில்லையென்பதைச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. நல்லா டான்ஸ் ஆடுறார். இடுப்பு பத்திரம் அம்மணி! விவேக்கின் காமெடியும், மணிசர்மாவின் இசையும் விழுந்த படத்தைத் தாக்கி நிறுத்துகின்றன. விவேக்குக்கு இதுதான் ரீ-என்ட்ரி. படத்தைக் கலகலப்பாக நகர்த்த முயன்ற இயக்குநர் சுராஜ் அடுத்த படத்தை அம்சமாகத் தருவாராக!

- அனு

படிக்காதவன் - பாமரன்



# வில்லு

அதே பழைய பழிவாங்கும் கதைதான். ஆனால், அதில் நின்று நிதானமாக விளையாடி வென்றிருக்கிறார் விஜய். கதையில் ஒன்றும் புதுமை இல்லை. எனினும் நிலம், நீர், ஆகாயம்... என கதை மாறிமாறி நகர்வது கோலிவுட்டுக்குப் புதுசு.

துருதுரு விஜய், வில்லுவில் ஸ்டைலிஷ்ஷாக என்ட்ரி ஆகியிருக்கிறார். தந்தை - மகன் என இரு வேடம் கட்டியிருந்தாலும் இரண்டிலும் வேகம் மட்டும் வில்லிலிருந்து புறப்பட்ட அம்புதான். டான்ஸ், ஆக்ஷன், ஆக்டிங்... என சகல திசைகளிலும் பறக்கிறது விஜய்யின் கொடி.

நயன்தாரா நடிப்பதற்குக் கதை ஒத்துழைக்காது என்பதால் கூடிய மட்டும் அழகாகக் காட்டியிருக்கிறார்கள். ஆனால், 'இப்ப விழுமோ எப்ப விழுமோ' ரேஞ்சுக்கு இடையில் உடுத்தியிருக்கும் ஆடை ஆட்டம் காண்பிப்பது மனசுக்குள் மக்கர் பண்ணுகிறது!

வடிவேலு ஏகத்துக்கும் ஏமாற்றம் தர, பிரகாஷ்ராஜின் வில்லத்தனத்தால் வெறுப்பேறுகிறது. அதனை தேவிஸ்ரீபிரசாத் தம் இசையால் கொஞ்சம் மட்டுப்படுத்துகிறார். ரஞ்சிதா, இனி 'அம்மா' கேரக்டருக்குத்தான் ஆப்ட் ஆவார்.

விஜய்க்கும் நயன்தாராவுக்கும் இடையில் மோதல், ஊடல், காதல்... காட்சிகளில் அரங்கேறும் சின்னச்சின்ன குறும்புகள் மனசுக்கு ஆறுதல். 'போக்கிரி' கொடுத்த ஹிட்டில் பிரபுதேவா கொஞ்சம் மயங்கியிருக்கிறார்!

வில்லு - ரசிகர்களுக்கு மட்டும்.

- பாமா

# போட்டோ போட்டி!



**உ**ங்க கற்பனைக்கு ஒரு சவால்!

அமெரிக்க முன்னாள் ஜனாதிபதி புஷ், இன்னாள் ஜனாதிபதி ஒபாமாவின் மனைவி மற்றும் குழந்தைங்க கிட்டே பேசிட்டு இருக்கார். இவங்க என்ன பேசியிருப்பாங்க?

வளவளன்னு இல்லாம கலகலன்னு ஒரு கமெண்ட் எழுதி அனுப்புங்க. அசத்தல் கமெண்ட் எழுதறவங்களுக்குப் பரிசு காத்திருக்கு. போஸ்ட் கார்டுல மட்டுமே எழுதுங்க. கூப்பனை மறக்காம ஒட்டுங்க.

முடிவு தேதி : 2.2.2009

போட்டோ போட்டி
ஆசிரியர் - கல்கி
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது

## தமிழ்நாட்டின் முதல் PET-CT



**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
- Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : **93814 36899**
**93814 36896**

10% Special
Discount On Sunday
for Master & Executive
Health Check-up

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

• கேன்சரை அறிகிறது. • கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. • கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. • சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. • இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. • மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. • ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). • மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. • நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி – 93451 20265, 93810 30712



**#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.**
**Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282**
**E-mail : info@drkamakshimemorialhospital.org**
**Website : www.drkamakshimemorialhospital.org**

